உ

கடவுள் துணை

உரோமரிஷி நாயனார்

அருளிச்செய்த

# வைத்தியம்-நூறு





இவை

திருவெண்காடு

ஆறுமுக சுவாமிகளால்

பார்வையிடப் பட்டது.

---

. இரத்தின நாயகர் ஸன்ஸ்,

திருமகள்விலாச அச்சியந்திரசாலை,

சென்னை.

---

இதன் விலை] 1936. [1 0 0

உ ரோமரிஷி

# வைத்திய அவிழ்த அட்டவணை

உ

சிவமயம்

## உரோமரிஷி நாயனார்

அருளிச்செய்த

# வைத்தியம்-௫௱



காப்பு

விருத்தம்

மூதமுதலாதார முடிவினின்ற
  மூர்த்தியெனுங்கணேசரது பாதங்காப்பு
தாலமெலாங்கடந்துநின்ற தாயின்பாதஞ்
  சனகாதிநால்வரது பாதம்போற்றி
காலமெனும்பிறப்பிறப்புங் கடந்துநின்ற
  கருணைதருநந்தீசர் பாதம்போற்றி
ஆலமறையுண்ட கண்டர்போற்றி
  ஐஞ்ஞூற்றையானுரைக்க அம்பாள்காப்பே. 1

அம்பரத்திலாடுகின்ற வையர்பாதம்
  அனுதினமுமனதினில்வைத் தருளும்பெற்று
தம்பரத்திலெனையாண்ட புசண்டர்பாதஞ்
  சதாநித்தம்பூசைபண்ணித் தாசனாகி
பம்பரம்போலுலகமெல்லா மாட்டிவைக்கும்
  பராபரத்தின்கிருபையதாற் பாசநீக்குஞ்
செம்பருத்திப்பூவதுபோற் சிவந்துநின்ற
  சின்மயத்தின்பாதமலர் சோதிகாப்பே. 2

சோதியெனுஞ்சுடரொளியாய் நின்றதேவி
  சொற்பெரியநாதர்கள் பாதம்போற்றி
வாதியெனும்பேர்படைத்து நின்றோர்க்கெல்லாம்
  வகைவிவரமாய்த்தெரிய வசனித்தேன்யான்
ஆதியெனும்பராபரத்தின் கிருபையாலே
  ஐஞ்ஞூற்றின்றிரந்தேர்ந்து வறியவென்றும்
பாதிமதிதரித்தசிவன் பாதம்போற்றி
  பராபரத்தினிறைந்துநின்ற பாதம்காப்பே. 3

## நூல்

ஆதாரமானதொரு மூலத்துள்ளே
அகண்டமகாமேருவென நின்றமூர்த்தி
பாதாரந்தனைப்பணிந்து வைந்நூற்சொல்வேன்
பரவெளியினின்றதொரு பரனைப்போற்றி
காதாரகேட்டுணர்ந்து வென்னையாண்ட
கடாட்சமதுநந்தீசர் கருணையாலே
தாதாரும்ரோமனென்று பேரும்பெற்று
சாயுச்சியபதவிதனிற் சார்ந்தேன்பாரே.

பாரப்பாஞானமுதல் யோகமார்க்கம்
பரிபாஷைகருவகற்றி வாதப்போக்கு
காரப்பா அட்டமா சித்தியோகம்
கருணைபெறவஞ்சனமும் வசியமாற்றஞ்
சீரப்பாமோடியிலே யனந்தம்பேர்க்கு
திறமானசரக்குவைப்பு செய்பாகங்கள்
ஆரப்பாவெனைப்போல சொன்னாரில்லை
அதனாலேயென்னூலை யொளித்தார்பாரே.

ஒளித்தாரேசித்தரெல்லாம் பேசிக்கொண்டு
ஓகோகோகுருமுறையைச் சொன்னதாலே
சழித்ததொருவுப்பதனைச் சுன்னமாகக்
காட்டினேன்வழலையென்ற கருவையெல்லாம்
அழித்தபொருளுட்கருவை வெளியதாக
விளம்பினேனாதாக்கள் மறைப்பையெல்லாம்
அழுத்தியேசாஸ்திரத்தை யொளித்துப்போட்டார்
அருட்பெருங்கும்பமுனி யையர்தானே.

தானானவழலையுப்பு சுன்னஞ்சொன்னேன்
தண்மையென்றசெந்தூரஞ் சாரநீரும்
ஊனான அடிமுடியின் பொருளையெல்லாம்
உள்ளுணர்ந்துஆராய்ந்து உரைத்ததாலே
தேனானவென்குருவும் புஜண்டமூர்த்தி
சேயனெனரோமனெனப் பேருமிட்டு
காணாதபொருளையெல்லா மறைப்புநீக்கி
காட்டுவன்முப்பூவின் கருவைத்தானே.

## முப்பூவின் கருவின் விபரம்

கருவென்னவழலையென்ற முப்பூதன்னைக்
  காணவென்றாலென்குருவைக் கருத்தில்வைத்து
உருவென்னவாதத்தி லண்டபிண்டம்
  உண்மையென்றகருவதனை யுரைக்கக்கேளு
குருவென்னவென்றால் மனமேயாசான்
  கூர்ந்துபார்நிலவுப்பு கொடியவேகந்
தருவென்னநாதமென்ன பூமிநாதன்
  சமிசயங்களில்லையடா தாயுமாமே. 8

## பூமிநாதம் விளைவின் நில விபரம்

தாயானநாதமது விருக்குந்தானஞ்
  சாற்றுகிறேன்யானுமதை யறிந்தமட்டும்
சேயானமதலையைப்போற் சொன்னேன்யானும்
  தீர்க்கமடாவலையது தீரந்தன்னை
மாயாதேமன்மதனைப் பேதியாதே
  மயக்கமதிற்சிக்காதே வாய்விடாதே
ஓயாதேதியானமதை மனத்துள்வைத்து
  ஓகோகோவுவர்நிலத்தைப் பார்த்துவாரே. 9

வாரப்பாபூநீறு விளையுந்தானம்
  வரிசைபெறச்சொல்லுகிறேன் மற்றப்பைநீக்கி
சேரப்பாவத்தலந்தான் சிவந்துகாணும்
  சிவனுமையுமந்திடத்திற் சேர்ந்துவாழ்வார்
காரப்பாவந்திடத்திற் பூமிநாதன்
  கதிரதுபோற்பொங்குமடா பருவந்தன்னில்
ஆரப்பாவந்திடத்திற் செல்லும்போது
  அதிகமடாசோதியது வமர்ந்தவாறே. 10

அமர்ந்ததுவுமேதெனவே தியானத்தாலே
  யல்லாதால்மனிதரங்கே செல்லப்போமோ
சிவந்தசவம்போற்றிரிந்த சுணக்கனுனல்
  சீறுமடாவந்திடத்தில் செல்லப்போகா
நமன்றனக்குநமனாகத் தியானஞ்செய்து
  நாதாந்தசத்தியது நாட்டம்விட்டால்

சுமந்தலுத்தமாடதுபோ னின்றுயானுற்
 சோதியடாவுன்னிடத்தில் தோணுவாரே.

தோணுதுவென்றுசொன்னே னேதனுலே
 சுத்தமனதில்லாத தோஷத்தாலே
காணுதுவென்றுசொன்னேன் மக்காள்நீங்கள்
 கன்னியதுபூசையைநீ மறந்ததாலே
கோணுதேயவளுடைய பூசைசெய்ய
 குடியிருந்துவத்தலத்திற் பார்க்கும்போது
ஆணுதவனுடைய சோதிதானும்
 அந்திட்டத்திற்போகுமடா வறிந்துபாரே.

அறிந்துகொண்டுதம்பனத்தை தியானஞ்செய்து
 ஆத்தாளைப்பூசித்து வருளும்பெற்று
சொரிந்தமலர்போனிற்குஞ் சோதிதன்னை
 சுருக்காகநீயெடுப்பாய் புட்பம்போல
பரிந்துமிகவெடுத்ததனைப் பீங்கானுள்ளே
 பக்குவமாய்வைத்ததனை சொல்லக்கேளு
பிரிந்தததுவும்போகாது வுன்னைவிட்டு
 பூரணியைப்பூசைபண்ணி புகலக்கேளே.

கேளப்பாஅப்பும்வுப்பு மொன்றுய்ப்போச்சு
 கிருபையிதிற்சொல்லிட்டேன் வழலைமார்க்கம்
தேளப்பாகொட்டுதல்போற் சுன்னமாச்சு
 சிவசிவாமுப்பூவின் குருவுமாச்சு
நாளப்பாகளிச்சுன்ன மிதுவுமாச்சு
 நாதமடாசவர்க்காரக் குருவுமாச்சு
வாளப்பாயிதையெடுத்து வைத்துக்கொண்டு
 மைந்தனேசரக்குகளை மாட்டியூதே.

ஊதவேசரக்குவகை வெந்துநீறு
 மொருநொடியிற்பாஷாணங் கட்டிப்போகும்
பாதையிலேயிதைவிட்டாற் பாதையில்லை
 பக்குவமாய்ச்சொல்லிவைத்தே னிந்தநூலிற்
போகையிலேசொல்லிவிட்டே னென்றுசொல்லி
 புகழ்முனிவர்தாமொளித்தா ரிந்தநூலை
பேதையைப்போலவரிடத்திற் றெண்டுபண்ணி
 பின்புநான்வாங்கிவந்தேன் பேணிப்பாரே.

பேணியேயென்னூலை வெளியில்விட்டால்
பிழைவருமேயுன்குலந்தா னீனமாகும்
ஊணியேவெகுகோடி நரகில்வீழ்வாய்
ஓகோகோசாபமது படிக்கும்பாரு
ஆணியேமனதில்வைத்துக் காத்தாயானால்
அரசனதுவசமாகி யருளுஞ்சொல்வார்
பாணியெனும்மீஸ்வரியாள் கிருபையுண்டு
பராபரத்தில்வைத்திடுவாள் பாருபாரே. 16

## இரவிமதி முப்பூ விபரம்

பாரப்பாமுப்பூவின் கருவைச்சொன்னேன்
பருவமதுசொல்லுகிறே னின்னங்கேளு
ஊரப்பாவுவர்மண்ணை வாரியென்ன
உள்ளபடிவாதமதுக் காகாதப்பா
நேரப்பாயின்னமொரு கணவைக்கேளு
நிகழ்த்துவேன்பிண்டமது முப்பூச்சுன்னஞ்
சேரப்பாபொற்சிலைபோல் பெண்ணைப்பாரு
சென்றவள்தான்கெற்பத்தில் பிண்டமாமே. 17

பிண்டமென்றுலிளங்கொடியாண் முதலாம்பிண்டம்
பெருமைபெறத்தானெடுத்துச் சொல்லக்கேளு
அண்டமெனுமாத்மாவி லஞ்சானபிண்டம்
அப்பனேயதுவவிய விழுந்துதானால்
குண்டமெனும்பீங்கானி லெடுத்துவைத்து
கூர்ந்துபார்பெண்ணாகில் மதியுமாகும்
பிண்டமதிலாணாகில் ரவியுமாச்சு
பெருமார்க்கஞ்சொல்லுகிறேன் பெருமைதானே. 18

காணப்பாபிண்டமதைக் கொண்டுவந்து
கடுகுபொடியாய்நறுக்கிப் பாண்டத்திட்டு
தோணப்பாயிதுக்கடுத்த செயநீர்தானும்
சொல்லுகிறேனேமைழயா னறிந்தமட்டும்
வேணப்பாவுருப்புப் படிதானைந்து
வெள்ளைகற்சுன்னமது படிதான்மூன்று
ஊணப்பாவுப்பதுவும் படிதான்மூன்று
உத்தமனேயிதுமூன்று மொன்றாய்ச்சேரே. 19

ஒன்றாகவிதுமூன்றும் பாண்டத்திட்டு
உத்தமனேசிறுபெண்ணீர் படியீரெட்டு
நன்றாகக்கூடவிட்டுக் கலக்கிக்கொண்டு
நாலாநாள்தெளிவதனை யிறுத்துவாங்கி
பண்டானவடுப்பில்வைத்து தீயைமூட்டு
பருவமுடன்குழம்புபோல் வருதல்கண்டு
ஒன்றானபீங்கானில் வழித்துவாங்கி
விபரமாய்ரவிமுகத்தி லுலரவையே. 2

உலரவைத்துவுப்பதுதான் பலமீரெட்டு
உத்தமனேசாரவகை சொல்லக்கேளு
அலரவைத்தநவாச்சாரம் வீரம்பூரம்
அப்பனேவெடியுப்பு சீனஞ்சூடன்
மலரவைத்தவெள்ளைமுகற் றாருகோரெட்டு
மைந்தனேவகைக்கொன்று பலமொன்றாக
சலரவைத்துபொடிசெய்து வுரலிலிட்டு
கண்டித்ததலைப்பிண்டங் கலந்துவையே.

கலந்துமேகட்டப்பாறையி னூற்குத்திக்
கண்ணிவிடுமையதுபோற் கண்டித்தேதான்
மலர்ந்துமேமெழுகதுபோ லானபின்பு
மைந்தனேபாண்டத்தி லிட்டுமூடி
கலந்துமிகமண்ணறைந்து சீலைசெய்து
நாற்சாணுகுழிவெட்டிப் புதைத்துப்போடு
அலர்ந்துமேநாற்பதுநாட் சென்றபின்பு
அப்பனேயெடுத்துரைப்பார் செயசீராமே. 2

ஆகுமேயந்நீரைப் பீங்கானுள்ளே
அப்பனேவிட்டுநீ ரவியில்வைத்து
ஏகுமேயுப்பதுதா னென்னசொல்வேன்
யென்பிள்ளாய்கன்னமென்றால் கொடியவேகம்
போகுமோரவிபீச மிதுதானப்பா
புகலுவாருவரென்றும் வண்ணனென்றும்
வேகுமேபட்டவிட மெல்லாந்தீயாய்
வேதாந்தசத்தியென்று மிதற்குப்பேரே. 2

பேரான அடியென்று மூலமென்றும்
பேசாத்சாரமென்று மனந்தானென்றும்
மாறுனமாதவிடாய் வழலையென்றும்
மகாபெரியமாலென்றும் யோனியென்றும்
பாறுனபிண்டமென்றும் புளிதானென்றும்
பருவமுடன்சூரியன்றன் பீசமென்றுஞ்
சாறுனசாகாத கால்தானென்றுஞ்
சாற்றுவாரிதனுடைய நாமந்தானே. 24

தானுனஈசனுப்பு விபரங்கேளு
சாற்றுகிறேன்முன்போலப் பெண்ணைபார்த்து
தேனுன அண்டமது ஆண்தானப்பா
சேரவேமுன்போல நொறுக்கியேதான்
ஊனுனவுப்பதுதான் முன்போற்செய்து
உத்தமனேயதுதன்னுல் கனநீராடுங்
கோனுனமுன்போல சரக்கைக்கேளு
குறிப்பாகபூமிபுடம் வைத்திடாயே. 25

வைத்திட்டுமுன்போலச் செயநீர்வாங்கி
மைந்தனேகுடோரியொரு பலமும்போட்டு
மெய்த்திட்டமாகவேதான் உப்பாய்ப்போகும்
வேணபடியிதன்பெருமை விள்ளப்போமோ
கைத்திட்டமானபல னிதற்குநாமங்
கதிரென்றும்ஞானியென்றுங் காரமென்றும்
பொய்த்திட்டுபோகாமற் சொன்னுரையா
போக்கோடேவென்குருவும் புசண்டர்தானே. 26

தானென்றும்அங்கியென்றும் மாதியென்றும்
தான்வெள்ளைச்சுன்னமென்றும் வீரமென்றும்
ஊனென்றவெடி யுப்பு ஊமையென்றும்
உத்தமனேவேகாத தலைதானென்றுங்
கானென்றவாகாசக் கம்பியென்றும்
வருமென்றும்வஸ்துவென்றுங் காட்டுவார்கள்
பானென்றசமாதியுப்பு நிலவுப்பென்றும்
பாதிமுத்துச்சிப்பியென்றும் பாடினுரே. 27

பாடினாரவரவர்க ளனேகம்பேர்கள்
பண்பானசாத்திரங்க ளனேகங்கோடி
தேடினாரென்னுடைய வைந்நூர்தன்னை
சிவசிவாகாணும லொளித்தார்சித்தர்
ஆடினாரிதைக்கண்ட பெரியோரெல்லாம்
அண்டமுதற்பத்மளவு மனேகமுண்டு
ஓடினார்பொதிகமலை ஐயர்தாமும்
ஓகோகோ அவர்கொடுத்து உரைத்திட்டாரே.

உரைத்திட்டமொழிகேட்டு சித்தரெல்லாம்
ஒடுக்கமதில்வைத்திருந்து பார்க்கும்போது
கரைத்திட்டவெல்லாமப் பொருளையெல்லாங்
கண்டுமேசாத்திரங்கள் கட்டினார்கள்
மறைத்திட்டுப்போகாம லின்னமொன்று
மைந்தனேசொல்லுகிறேன் மார்க்கங்கேளு
முறைத்திட்டந்தப்பாமல் முன்போற்பெண்ணை
முயற்சியாய்பார்த்தெடுத்து முறையைக்கேளே.

கேளப்பா அவளுடைய நாதந்தானுங்
கெட்டியாமுதற்றரந்தா னெடுத்துவந்து
கோளடாவாரமதி லாதிவாரங்
கொண்டுவந்தாலதின்பெருமை கூறுவேன்யான்
ஆளப்பா ஆணுமல்ல பெண்ணுமல்ல
அப்பனே அலியுமல்ல வறிந்துகொள்ளு
வாளப்பாயிதையெடுத்து உப்பாய்பண்ண
வகைசொன்னாகத்திசர் மார்க்கந்தானே.

தானென்றநந்தீசர் முறையைக்கேளு
தண்மைபெறவெந்தனுக்குச் சாற்றினார்பார்
கோனென்றவையரவர் சொன்னபோக்கு
கூறுவேன்ஐந்நூற்றில் குறைவாராமல்
ஊனென்றநாதமடா பீங்கானுள்ளே
யுத்தமனேகொண்டுவந்து சொல்லக்கேளு
பானென்றரவிபீசம் விராகனென்று
பதமாகப்பொடித்திட்டுச் சொல்லக்கேளே.

## வாதத்துக்கு ஆதியுப்பு

கேளடாசூடனது கலந்தானென்று
  கெட்டியாய்ப்பூரமது பலந்தானைந்து
வாளடாசீனமது பலந்தான்மூன்று
  மயங்காதேகொச்சியென்ற வீரமூன்று
தூளடாசெய்துநீ பீங்கானுள்ளே
  சுரோணிதத்திற்கலக்கியே சொல்லக்கேளு
பாளடாபோகாமற் சீலைமண்செய்
  பக்குவமாய்க்குழிவெட்டிப் புதைத்துப்போடே. 32

போடுநீபட்சமது கடந்துதானால்
  பூரணியைப்பூசைபண்ணி யப்பால்வாங்கே
ஆடுநீகோடிவித்தை யிந்தநீரில்
  அம்மம்மா வாச்சரிய மாயிநாதம்
ஓடுநீயிந்நீரை ரவியில்வைக்க
  ஓகோகோவுப்பாகு முண்மைசொன்னேன்
சூடேநீயிந்தவுப்பை கண்டபோதே
  சொரூபமென்றசித்தியெல்லா மிதற்குள்ளாச்சே. 33

ஆச்சப்பாவிப்பூவை மறைத்தார்சித்தர்
  அதிகமாமுப்பூவின் சுன்னத்தாதி
போச்சப்பா இதைவிட்ட தோஷத்தாலே
  போக்கோடேவாதமுறை பொருளுங்காணார்
நீச்சப்பாநிலையாத கேணியாகும்
  நீற்றினத்துக்காதியடா விந்தவுப்பு
பேச்சப்பாபேசாத மவுனவுப்பை
  பேசினதாலென்னாலே மறைத்தார்பாரே. 34

பாரேநீவாதத்துக் காதிசொன்னேன்
  பருவமுடன்சேர்க்கும்வகை சொல்லக்கேளு
காரேநீமுன்னுரைத்த ரவிமதியின்பீசங்
  கருத்துணர்ந்துநீயெடுப்பாய் களஞ்சியாறு
சேரேநீயிம்மூன்று மொன்றாய்ப்போட்டு
  தீர்க்கமாய்க்கல்வத்தி லரைக்கக்கேளு
வேறேநீயெண்ணாதே மெலிந்திடாதே
  மெய்தளர்ந்துபோகாதே வெண்புழுகுகூட்டே. 35

கூட்டவேகளஞ்சியது மூன்றைப்போட்டு
குளிரவேகல்வத்தி லாட்டும்போது
மாட்டவேமையதுபோ லாகும்பாரு
மைந்தனேரவிமுகத்தில் வைக்கும்போது
ஆட்டவேபொங்கியது சுன்னமாகும்
அப்பனேபீங்கானில் பதனம்பண்ணு
வாட்டமென்னவொன்றல்லோ முப்பூச்சுன்னம்
வந்துதடாவிதின்பெருமை வழுத்தப்போமோ.

## தேவி சக்கரம்

போமென்றமுப்பூவின் சுன்னந்தன்னைப்
புகழ்பெறவேபீங்கானில் வைத்துமூடி
ஆமென்றயாத்தா ளைப்பூச்சுன்னம்
அதிரமென்றசக்கரத்தை சொல்லக்கேளு
வாமென்றமுக்கோண மிட்டுமேலே
வளையமொன்றுவதின்மேலே யிதழ்தானெட்டு
வேமென்றவறுகோண மதின்மேலிட்டு
வீசுவாயதின்மேலெட் டிதழும்போடே.

போடவேயதின்மேலே மூன்றுவரைகீறி
புகழ்பெறவேகோட்டையதில் வாகனுலு
ஆடவேமுக்கோண மறுகோணத்தில்
அப்பனேசூலமிட்டுச் சொல்லக்கேளு
நாடவேமுக்கோண விதழினுள்ளே
நாதாந்தசத்திகளை யெட்டும்போட்டு
சாடவேயறுகோணமித ழெட்டுக்குள்ளே
சதானந்தவயிரவர்க ளெட்டுஞ்சாற்றே.

சாற்றவேயறுகோண மீதினுச்சி
தண்மைபெறவஷ்டதிக்குப் பாலகரைநாட்டு
போற்றவேயிதழ்சந்து நடுமையத்துள்
போட்டிடுவாயட்டசெகந் தன்னைத்தானும்
காத்தருளவேணுமென்று முக்கோணத்தில்
கருணைபெறவிதழ்சந்துக் கருவைக்கேளு
ஆற்றவேயந்திடத்தி லட்டநாகம்
அப்பனேயிதழெட்டு வறையக்கேளே.

கேளடாமுக்கோண நடுமையத்துள்
  கிருபைபெறவட்டமிட்டுச் சொல்லக்கேளு
கோளடாவாராம லாயிபீசங்
  குறிப்பாகத்தானிடுவாய் கூறுவேன்யான்
பாளடாபோகாது அகாரந்தன்னை
  பார்க்கவேயதினடுவி லிருத்திப்போது
கேளடாவதின்சுழியின் மேலேதானுங்
  கீர்த்திபெறப்பேதனமுங் கூறிடாயே. 40

கூறியேயகாரமுடி தன்னிலேதான்
  கிலீயுமென்றுபோட்டுவிடு யேகபீசம்
ஆறவேயப்பீச முச்சிமீதில்
  அப்பனெயஃகெனவுஞ் சுழித்துப்போடு
தேறவேஆயினது பீசமாச்சு
  சிவசிவாயிதின்பெருமை செப்பார்செப்பார்
மாறவேயகாரவடி பீசந்தானும்
  மைந்தனேயிம்மென்று வைத்திடாயே. 41

வைத்திட்டமுக்கோண முச்சிமீதில்
  மைந்தனேஸ்திரீயென்று வைத்துப்பின்னுங்
கைத்திட்டமாகத்தா னிருமூலைக்குங்
  கணக்கால்-ஸ்ரீம்-ஐம்-மென்று கட்டுவாய்நீ
மெய்த்திட்டமானதொரு வறுகோணத்தில்
  வேதாந்தவட்சரத்தை விளம்பக்கேளு
பொய்த்திட்டுப்போகாது-ஐ-ம்-ந-ம்-கூம்
  புகழுள்ள-ரம்-ஹாம்-மென்றுபோடே. 42

போடவேமுக்கோண விதமெட்டுக்குள்
  போடுகிறவட்சரத்தைப் புகலக்கேளு
ஆடவே-சூ-ஆ-ஒ-உ-வென்றுபோட்டு
  அப்பனே-க-ளு-ய-ஐ யென்றுதானே
கூடவேணுமென்றால் வேல்வட்டத்துள்
  கூறுவேனிம்மென்று மெட்டுப்போட்டு
நாடவேயிதழ்நுனியி னுச்சிமீதில்
  நாடுகின்றவட்சரத்தை நான்சொல்வேனே. 43

சொல்லுவேன்-சூம்-கூம்-றீம்-நும்-மென்றுதானே
சொற்பெரிய-தம்-வம்-யம்-பிம்-மென்றுபோடு
வெல்லுவேனென்றுவனம் பதறிடாமல்
விதித்துப்பாரிதழ்சந்தி னட்சரங்கடன்னை
சொல்லுவேன்-கூம்-றீம்-தாம்-வாம்-வம்மென்று
சுருதியாம்-யம்-லம்-பிம்-மென்றுகட்டி
கொல்லுவேனென்றாலும் கொல்லப்போமோ
கூத்துவன்றனுக்கிணையுங் குலைந்துபோமே.

போகுமோவாசலதிற் கிழக்குத்தொட்டு
பூட்டுகிறவட்சரத்தை புகலக்கேளு
ஆகுமே-ஸ்ரீம்-ரம்-மீம்-ஷம்-மென்றுதானே
அருள்பெருக-வம்-யம்-லைம்-ஹரீம்மென்றிட்டு
தாகுமேயாபான தேவதைகடன்னை
சக்கிரத்திலேவிதித்து தாக்கும்போது
வேகுமேயண்டமெல்லாஞ் சாபமிட்டால்
வேதாந்தபூரணியைப் பூசித்தோர்க்கே.

## பூசை விதி

பூசிக்கவேணுமென்றூர் சொர்னமீதில்
போக்கோடேயட்சரங்கள் புகழாய்க்கீறி
ஆசிக்கவேணுமென்று லாத்தாடன்னை
அப்பனேபூசைசெய்யும் வகையைக்கேளு
வாசிக்குமைந்தர்களே பூமிதன்னில்
வளமாகத்தான்மெழுகி நெல்லுமிட்டு
நேசிக்கும்வாழைபிலை யதன்மேற்போடு
நேர்ப்பாகப்பச்சரிசி நிரம்பக்கொட்டே.

கொட்டவேயதின்மேல் வெள்ளிலைபரப்பிக்
கூடுநடுமையஞ் சக்கரத்தைவைத்து
ஒட்டவேயதின்பேரில் தாமரையின்பூவை
ஒகோகோசாத்திவிடு வுறுதியாக
முட்டவேகும்பமதிற் சலத்தைமோர்ந்து
முப்புரிநூல்தனைச்சுற்றி மாவிலையுஞ்சாத்தி
கட்டவேவஸ்திரமுங் தேங்காய்வைத்து
கருணைதரவேணுமென்று மஞ்சள்சாத்தே.

சாத்தவேயக்ஷரத்தையதின்மேலோட்டி
தன்மைபெறச்சுகந்தமதை நிறையச்சாத்தி
காத்தருளவேணுமென்றே தர்ப்பைதன்னை
கட்டியேமுக்கோணம் போலச்சாத்தி
சேர்த்தருளவேணுமென்றே யுன்னிடத்தில்
திரிபுரைக்குப்பாற்பழங்கள் பலகாரங்கள்
பாத்தருளவேணுமென்று தேவிமுன்பு
பரிவாகவாமம்வைத்துப் பூசைபண்ணே. 48

பண்ணவேதேங்காயை யுடைத்துவைத்து
பரமானமத்தனையும் படைத்துமீந்த
துண்ணவேமுப்பூவின் சுன்னந்தன்னை
யுறுதிபெறவவளுடைய மடியில்வைத்து
கண்ணவேபரிமளங்கள் கஸ்தூரிவகைகள்
கருணைபெறத்தான்சாத்தி சொல்லக்கேளு
ஒண்ணவேயென்தாய்க்கு தூபதீப
மென்பதுதானுங்கொடுத்து சொல்லக்கேளே. 49

கேளடாமேளவாத் தியத்தினாலுன்
கிருபைதரவேணுமென்று தியானஞ்செய்து
கோளடாவாராம லாத்தாள்பீசங்
கூறுவேன்ஐயுங்கிலியுஞ் சவ்வுமென்று
வாளடாசவ்வுங்கிலியும் ஐயுமென்றுவாக்கு
வரபரமேஸ்வரி வருகவருகவென்று
பாளடாபோகாது தியானஞ்செய்நீ
பரிவாகவாயிரத்தொண் ணுருத்தான்போடே. 50

போடவேயென்தாயா றமிராமிதானும்
பொங்கியேயானந்தம் பொழிவாள்பாரு
ஆடவேயவளுடைய கூத்தையெல்லம்
அறைகிறேனுனுமதை யறிந்தமட்டும்
கூடவேயென்னிடத்திற் குடியாய்வாழும்
கூற்றுவனற்றமைப்பணிந்த கொடுமையாலுங்
தேடவேயுன்னைப்போ லெங்களுக்கு
தெய்வமதுவேறுண்டோ தேவியென்னே. 51

எண்ணவேயென்தாயா ரிருந்தவீடு
 யேழைமதிபோகா ளென்னைப்பெற்றாள்
உண்ணவேநவகோணந் தன்னில்வாழும்
 ஓகோகோவவளுடைய ரூபந்தன்னை
நண்ணவேயென்னாலே சொல்லப்போமோ
 நாதாந்தரூபியவள் நாட்டந்தன்னை
சொன்னவரும்புத்தியிலே யதிகமப்பா
 சொற்பெரியாள்வாமியவள் ரூபந்தானே.

தானென்றபுத்தியிலே யிவளைப்போலே
 சமர்த்தியடாஐவரையு மாண்டதேவி
ஊனென்றஉலகமதிற் குடியாய்வாழ்ந்த
 வுத்தமியாளம்பரத்தி லாடுஞ்சோதி
பானென்றமதிதனையும் பிறையாய்ச்சூடி
 பாதாளச்சக்கரமும் படைத்தரூபி
நானென்றமதியமுத மீந்தாள்பாரு
 நாதாந்தபிரணவத்தின் நாட்டந்தானே.

தானென்றவவள்பதத்தில் மனதைவைத்து
 சதாநித்தம்பூசைபண்ணித் தாசனாகி
வானென்றமவுனவெளி ஞானந்தன்னை
 வசனித்தாளெந்தனுக்கு மாயரூபி
கோளொன்றும்வாராம லென்னையாண்ட
 கொடுஞ்சூரிநிட்டூரி கொடியகாமி
பாழொன்றுமாகாது விவளைக்கண்டார்
 பரனானதுவசமாவார் பாருபாரே.

பாரேநீயவளுடைய தொழிலைக்கேளு
 பருவமுடனைவரையும் பலகையாக்கி
நேரேநீமதிகம்பங் கால்களாட்டு
 நெட்டுவளைசதாசிவத்தை யதிலேபோட்டு
போரகீரவிமதியும் பலுகாய்ப்போட்டு
 பன்னிரண்டுராசியையும் வடமாய்க்கோர்த்து
சேரேநீசேடனைத்தான் மெத்தையாக்கி
 செழுஞானவூஞ்சலிலே சென்றாள்பாரே.

பாரப்பாவூஞ்சலிலே யிருந்துகொண்டு
பரமசிவனுடிவரப் பார்த்தாள்பாரு
காரப்பாவவரா மொட்டைப்பார்த்து
கருத்துடனேதானழைத்து மடியில்வைத்தாள்
பேரப்பாவண்டமெல்லா மிவளேயாண்டாள்
பேதையடாவிளங்கண்ணி பெதும்பையாகு
கூறடாவென்றாலுங் கூறப்போமே
கொடியிடையாள்சதித்யது கோலந்தானே. 56

கோலமெல்லாமிவளுடைய கோலமல்லால்
சொண்டவனையம்பலத்தி லாடச்சொன்னாள்
ஜாலமெல்லாமென்தாயார் ஜாலமல்லால்
தானுமதுவேறுண்டோ சாகரங்கடன்னிற்
பாலமெல்லாங்கடந்துவெளி யம்பரத்தினின்ற
பரஞ்சுடரேசிற்குணமே பண்புள்ளானே
காலமெனும்பிறப்பிறப்புங் கடந்துநின்ற
காரணியேநாரணியே கனியேயென்னே. 57

ண்ணவேயுன்னையுந்தான் பூசைபண்ண
வீசனால்முடியாது வெவராற்கூடும்
ண்ணெனவும்விருஷமுதற் சாகரங்களெல்லா
வானெனவும்மக்கினியின் மயமுமாகி
கண்ணெனவுமொளியாகி மமுதமாகிக்
கரமகளைரூபமுமாய்க் கருத்துமாகி
பெண்ணெனவுநின்றதொரு வென்தாயாகி
பேரிளம்பெண்ரூபமுமாய்ப் பெற்றாள்பாரே. 58

பாரப்பாவிவளைப்போ லெவர்களுக்கும்
பாருலகிற்கிடையாது பார்ப்போர்க்கேழை
சேரப்பாவிவளைநான் காணும்போது
சிறுபிள்ளையைந்துவய துள்ளதேவி
ஆரப்பாவாத்தாளை யிப்போகண்டால்
அதிலேயுந்தான்சிறுபிள்ளை யாவாளப்பா
காரப்பாவிவளுடைய பாதந்தன்னை
காணுமலென்னாளுங் கலங்கினாரே. 59

கலங்கையிலேபீரணியும்-ஆ-ஊ-வென்று
காட்டினுள்சத்தவொலி நாதந்தன்னை
மலங்கியேமவுனத்தி லிருந்துகொண்டு
மாசற்றசோதிதனை மனதில்வைத்து
கலங்கியெனுமெட்டெழுத்தின் முடிவினின்ற
சச்சிதானந்தவெள்ளத் தாயார்தன்னை
குலுங்கியதோராட்டமெல்லாந் தேடிப்பார்த்து
கூகூவென்றவரு முறையிட்டாரே.

முறையிட்டசாதமதைக் கேட்டபோது
முக்குணத்திமுன்பின்னாய் முழித்துப்பார்த்து
கறையிட்டவானந்த வெள்ளம்பொங்கி
கருணைதந்தோமெனவழைத்தாள் கையினாலே
பறையிட்டவாத்தாளைத் தொழுதுபோற்றி
பாதமதிற்பணிந்தார்களவர்தாமுங்
குறையிட்டகுறைகளெல்லாந் தான்றவிர்த்துக்
கூப்பிட்டுவமுதமதைக் கொடுத்தாள்பாரே.

கொடுக்கையிலேதான்வாங்கி யமுதமுண்டு
குறிப்பாகவவள்மதத்தை மனதில்வைத்து
அடுக்கவேயாதார வெளியிற்சொக்கி
ஆத்தாளுமையருமா யறிவாரென்று
நடுக்கவேமனதுதான் பேதியாமல்
நான்சொன்னபடியேநீ பூசைசெய்வீர்
கொடுக்கவேவேணுமென்று ஆத்தாள்தானுங்
கூப்பிட்டுமுப்பூவைக் கொடுப்பாள்பாரே.

பாரேநீயவள்பதத்தைப் பூசைபண்ணி
பன்னீருஞ்சந்தனமுங் கலந்துகொண்டு
வாரேநீகும்பத்திற் சொரிந்துபின்னும்
வண்மையுடனேமத்தியாகு திசையைச்செய்து
சேரேநீவில்வத்தா லர்ச்சனையுஞ்செய்து
சித்திக்கவேணுமென்று தீபங்காட்டு
வேறேநீமனமொன்றிற் பாய்ந்திடாமல்
வேதாந்தசத்தியைநீ பூசைபண்ணே.

பூசைசெய்துமுப்பூவின் சுன்னந்தன்னை
புகழ்பெறவேயொடுக்கமதி லடக்கஞ்செய்து
ஆசைகொண்டப்பாத்திரங்கள் வழக்கமாகி
ஆத்தாளைப்பூசைசெய்து வருளைப்பெற்று
பாஷையெனும்பரிபாஷை கருக்களெல்லாம்
பாடுவேன்தனித்தனியே சரக்குவேதை
பேசையிலேயிக்கருவைச் சொன்னயானல்
பிளந்தெரியுமுன்சிரசும் பேணிப்பாரே. 64

## சாரமெழுகு செய்யும் விபரம்

பாரப்பாமுப்பூவின் சுன்னந்தன்னைப்
பணம்போலத்தானெடுத்துச் சொல்லக்கேளு
ூரப்பாசாரமது பலந்தானென்று
அப்பனே வாய்நீரா லரைத்துக்கொண்டு
ாரப்பாவத்திப்பால் கவசங்கட்டி
கைமுறையாய்த்தீவாட்ட மெழுகாய்ப்போகுஞ்
-ரப்பாசொர்னமென்ற ரேக்குதன்னைச்
சென்றதின்மேற்சுத்திநீ திரும்பிவாட்டே. 65

## சாரம், நவாச்சாரம், சொர்னம், தங்கரேக்கு

்டையிலேமெழுகதுவாம் ரேக்குதன்னை
திருவிநன்றுயுட்கொண்டு வாங்கும்பாரு
டையிலேரேக்கதனைப் பலமரையேதின்றல்
-றுதிபெற்றமெழுகதனை யுரைக்கக்கேளு
டையிலேயாத்தாளைப் பூசைபண்ணி
அப்பனேமதிதனிலே நூற்றுக்கொன்று
நாட்டையிலேயேழரையு மாகுமாகும்
நந்தீசர்சொன்னபடி நாம்சொன்னோமே. 66

சொன்னதொருசாரமது வின்னங்கேளு
சூட்டுவேன்முப்பூவை விராகனென்று
ண்ணமுள்ளசாரமது பலந்தானென்று
யெடுத்துநீயண்டமென்ற வென்கருவினாலே
முன்னமுள்ளகுருவதனை யாட்டிக்கொண்டு
முழுதுமதைக்கவசமிட்டு ரவியில்வைத்து

அன்னமெனுமூன்றெருவிற் புடத்தைப்போடு
அப்பனேநீயறியது சுன்னமாமே.

ஆமென்றசாரமதை யெடுத்துக்கொண்டு
அதிற்பச்சைசாரமது மூன்றுபங்கு
போமென்றவெள்ளருக்கன் பாலாலாட்டி
புகழ்பெறவேபீங்கானில் வழித்துவப்பி
நாமென்றபனியில்வைக்கச் சயநீராகும்
நயம்பெறவேகுப்பிதனி லடைத்துக்கொண்டு
தாமென்றசாரமது பலந்தானென்று
தாக்கடா தீயைவைத்து சுறுக்குத்தானே.

தானென்றசாரமது கறுக்குபோட
தட்டுண்டுசுட்டமடா சாரந்தானுந்
தேனென்றசாரமது செவந்துகாணுஞ்
சிவசிவாசெந்தூர மென்னசொல்வேன்
ஊனென்றசாரமது கல்வத்திட்டு
உத்தமனேதாளகமுங் கொதிகூட்டி
பானென்றகெவுரியது ரேக்கைத்தானும்
பலமதுதான்காலாகப் பார்த்திடாயே.

பார்த்துநீகல்வமதி லிட்டுக்கொண்டு
பகரவேமுன்செயநீர் தன்னாலாட்டி
சேர்த்துமேசாரமதைத் தானரைத்து
திரும்பவதைவழித்துநீ வட்டுபண்ணிக்
காத்துமேவாடாமல் ரவியில்வைத்துக்
காய்ந்தபின்புகாடையெரு புடத்திற்போடு
ஆத்துமேசெந்தூர மென்னசொல்வேன்
அரஹராவாதமிதி லமைந்தவாறே.

வாறெனசெந்தூரந் தனையெடுத்து
மைந்தனேயாத்தாளைப் பூசைசெய்து
ஆறெனசெம்பதனில் நூற்றுக்கொன்று
அணைந்திடவேமாற்றுமா றரையுங்காணுங்
கூறினவெள்ளியிலேப் பத்துக்கொன்று
கொடுத்திடவேபத்தரையுங் குறையாதப்பா

சீரானசெந்தூரங் குன்றியுண்ணு
திரேகமதுவலுத்துவிடுந் திறஞ்சொன்னோமே. 71

சொன்னதொருசெயநீரி லின்னங்கேளு
சூடனதிற்பலமொன்று சுருக்குப்போடு
கண்ணவேகரைந்ததுவுஞ் சுன்னமாகும்
காட்டாதேயொருவரிடங் கடக்கவைத்து
எண்ணமுள்ளவெடியுப்பு நாலாங்காச்சல்
எடுத்துநீபலமதிலே சுருக்குத்தாக்க
கொன்றுதான்போடுமடா வெடியுப்பைத்தான்
கொடியதொருசுண்ணம்பு கூட்டந்தானே. 72

கூட்டமென்னவீரமதிற் பலந்தானென்று
குழைத்துநீபூசிடுவாய் முப்பூச்சுண்ணம்
நாட்டமென்றசெயநீரா லரைத்துப்பூசி
ரவிமுகத்தில்மூன்றுநாள் காய்ந்தபின்பு
வாட்டமில்லாசெயநீரால் சுறுக்குப்போடு
மைந்தனேசாமமது போட்டாயானால்
ாட்டமென்றசுன்னமதை யென்னசொல்வேன்
கரையடங்காவேதையடா கண்டுபாரே. 73

ண்டுமேசுன்னமது மூன்றுமாச்சு
கதிரென்றும்மதியென்றுங் கனல்தானென்றும்
பண்டுமேயுரைத்ததொரு யிதுதானப்பா
பாடினாரவரவர்க ளனந்தம்பேரைத்
தொண்டுபண்ணித்திரிந்தாலுஞ் சொல்லார்சொல்லார்
சூட்சமடாயிதின்பெருமை சொல்லப்போமோ
மண்டுமேயண்டமதிற் றியாமலெங்கும்
மயங்குமேசராசரங்கள் மருவிப்பாரே. 74

மருவியதோர்சுன்னமென்ற சுன்னந்தன்னை
மைந்தனேவகைவகைக்கு கழஞ்சிவாங்கி
அருவியெனுஞ்செயநீரிற் கலக்கிக்கொண்டு
அப்பனேமுப்பூவில் விராகன்போடு
வெருவியேரவிமுகத்தில் முகூர்த்தம்வைத்தால்
வெகுண்டெழுந்துபோகுமடா செயநீர்தானும்

சுருதியெனுமிதின்பெருமை சொல்லப்போமோ
சூட்டுவோம்பணியில்வைத்து செயநீர்வாங்கே.

வாங்கியேகுப்பிதனி லடைத்துக்கொண்டு
வாய்பலப்பக்கல்லதனால் மூடிப்போடு
தாங்கியேபலமொன்று வீரந்தன்னை
தனிசெயநீர்தனித்துவைத்து வாட்டுவாட்டு
பாங்கியெனும்வீரமது மெழுகாய்ப்போகும்
பராபரைக்குமுதல்நாதம் பாருபாரு
தூங்கியே திரியாதே ரேக்கைச்சுத்தி
துப்புறவாய்நெருப்பூதி வாட்டுவாட்டே.

வாட்டையிலேரேக்கைதனைச் சுழற்றிவாங்கு
மைந்தனேகாற்பலந்தான் செலுத்திப்போடு
ஊட்டையிலேரேகித்து மெழுகாய்ப்போகும்
உத்தமனேயிதன்பெருமை யுரைக்கக்கேளு
நாட்டையிலேவெள்ளிதனில் நூற்றுக்கொன்று
நாட்டிடவேமாற்றதுவும் நாலேந்தாகும்
தேட்டையிலேயிதனைவிடத் தேட்டுமுண்டோ
சிவசிவாயிதன்பெருமை செப்பொணாதே.

## வீரமெழுகு

ஒண்ணானவீரமதை யின்னங்கேளு
ஓகோகோபலமதுதா னெடுத்துக்கொண்டு
கண்ணானசெயநீரிற் றேய்த்துநீயுங்
கடுரவியிற்போட்டுவிடு தினந்தான்மூன்று
பண்ணானகெந்தகமும் பலந்தான்ரெண்டு
பற்றிநின்ற * விடந்தீஞ்சான் பலமிரண்டு
குண்ணாதேதானரைக் குகைபோற்பண்ணி
கொடியதொருவீரமதை வைத்திடாயே.

வைத்துமேசீலேமண்ணு யேழுஞ்செய்து
மைந்தனேயெருவைந்திற் புடத்தைப்போடு
பொய்த்துமேபோகாது கட்டிப்போகும்
போக்கோடேயிதையெடுத்துச் சொல்லக்கேளு

* விடந்தீஞ்சான் - கொல்லேப்பல்லி.

ஐந்துமேபோகாது கல்வத்திட்டு
அப்பனேதாளகமுஞ் சிலையுங்கெஞ்சி
செத்துமேகவுரியைத்தான் கூடப்போட்டு
சேர்சூததங்கமென் றேர்க்குபோடே. 79

போடவேவெடியுப்பு நரகந்தானும்
போட்டிடுவாய்களஞ்சியன் அரைதான்வீதம்
நாடவேயிதுவெல்லா மொன்றாய்ச்சேர்த்து
நாட்டுவாய்கல்வமதி லரைக்கக்கேளு
ஆடவேமுருக்கம்பூச் சாற்றினாலே
அப்பனேநாற்சாம மரைத்திட்டேதான்
சாடவேரவிமுகத்தி லுலரவைத்து
தன்மைபெறக்காசியென்ற மேருக்கேற்றே. 80

## எரிப்புக்குத் திட்டம்

ஏற்றிலேவாலுலகையிற் றுளிவைத்த
இதமாகப்பொடிமணலைக் கொட்டுகொட்டு
ஆற்றியேநான்குவிர லாழங்கொட்டி
அப்பனேயதின்மேலே குப்பிவைத்து
ஏற்றிசைமணலிட்டும் பந்தனஞ்செய்து
நடுமூக்குயிருவிரல்தான் தெரியவிட்டு
ஏற்றசையாவிடந்தனிலே யடுப்பையிட்டு
கருவெல்லாம்விறகதனுற் றீயைமூட்டே. 81

மூட்டியேதீபம்போ லெரிநேர்ப்பாக
முதற்சாமம்தான்கடந்து விரண்டாஞ்சாமம்
ஆட்டியேயிருவிறகு கமலம்போலே
அப்பனேசாமமது கடந்துதானல்
சூட்டியேநால்விறகு யிருசாமந்தான்
தோணவேதானெரித்து சொல்லக்கேளு
மாட்டியேராக்கால மாறப்போடு
மைந்தனேபனிரெண்டு சாமந்தானே. 82

தானென்றவெரிப்புக்கு விறகைக்கேளு
தன்னுடையதட்டைவிரற் பிரமாணந்தான்
வானென்றவிறகுக்கு நீளங்கேளு
மைந்தனேநாற்சாணு மட்டமாக்கி

ஊனென்றவெரியுப்பு திட்டஞ்சொன்னேம்
ஓகோகோசெந்தூரத் துண்மைகேளு
மானென்றகுப்பியைத்தா னுன்காநாவில்
மைந்தனேயெடுத்துவர வைத்திடாயே.

எடுத்துமேயாத்தாளை பூசைபண்ணி
யேகாந்தவைரவனைத் தியானஞ்செய்து
தொடுத்ததொருதொழில்களெல்லாஞ் சித்தியாக
தோணவேவேணுமென்று தொழுதுபோற்றி
அடுத்திருந்துவெனைகாக்க வேணுமென்று
அர்ச்சித்துகுப்பியைத்தா னுடைக்கும்போது
புடத்திருந்தகுப்பியைத்தா னுடைக்கும்போது
பூரணமாஞ்செந்தூரம் புகலக்கேளே.

கேளப்பாசெந்தூர மருணன்போலாங்
கிருபைபெறதானெடுத்து வைத்துக்கொண்டு
கேளப்பாவாராமற் குன்றியுண்ணு
கொடுஞ்சுறுக்குகாயசித்தி கூறப்போமோ
வேளப்பாயிதையெடுத்து வைத்துக்கொண்டு
வெள்ளிதனக்காயிரத்துக் கொன்றுபோடு
சூளப்பாமாற்றதுவு மிருபதாகுஞ்
சொல்லுவேனிதன்பெருமை யின்னந்தானே.

## லிங்கக்கட்டு மெழுகு

தானென்றவசம்பினிலே நூற்றுக்கொன்று
தான்கொடுக்காமற்றென்ன விருபதாகும்
வானென்றநதலோக வினங்களெல்லாம்
மாட்டிடவேயேழறையுங் குறையாதப்பா
கோனென்றவிடைக்காட்டா ரிந்தகற்பங்
கொண்டல்லோகோடியுகம் வாதம்பார்த்தார்
தேனென்றமொழியாள்தா னெனக்குச்சொல்லி
செப்பினேன்கமலமுனி தனக்குத்தானே.

நானென்றலிங்கமது கம்பியாக
நன்றாகத்தெரிந்தெடுத்து பலமதொன்று
தானென்றசெயநீரால் சுறுக்குப்போடு
தயவாகசாமமது போட்டாயானல்

வானென்றலிங்கமது கட்டிப்போகும்
மைந்தனே * குருக்குவிரை தைலம்வாங்கி
ஊனென்றலிங்கத்திற் சுருக்குபோட
ஓகோகோமெழுகாகு முண்மைதானே. 87

உண்மையுடமெழுகதனை யெடுத்துக்கொண்டு
ஒருகழஞ்சிரேக்கதனை யெடுத்துக்கொண்டு
நன்மையென்றரவிமுகத்தில் வைத்தாயானல்
நாள்மூன்றில்தின்றுவிடும் ரேக்குதன்னை
வண்மையெனவிதையெடுத்து § மதியிற்றாக்கு
மைந்தனே நூாதனுக் கொன்றுதானும்
தண்மையென்றதங்கமது வென்னசொல்வேன்
சரிமாற்றுபத்தரையுந் தப்பாவாறே. 88

வாறுகேளிம்மெழுகைக் குன்றியுண்ணு
மைந்தனேகோடிவகை யிறுத்துப்பாரு
ஆறுயேயிம்மெழுகைச் சொன்னரில்லை
அரனெனக்குசொன்னவித்தை யுனக்குசொன்னேன்
சேருமேவித்தையது வாலம்போலச்
சேல்விழிகளருணனைப்போற் சிவந்துகாணும்
பாருமேமெழுகினது தீரந்தன்னைப்
பாடிவிட்டேனைந்நூற்றி லின்னங்கேளே. 89

## லிங்கப் போக்கு

இன்னமுந்தான்சொல்லுகிறேன் லிங்கப்போக்கு
யென்குருவாம்புசுண்டரது கிருபையாலே
சொன்னதொருலிங்கமது பலந்தானென்று
சூட்டுவேன்முன்போலக் கட்டிக்கொண்டு
நண்ணவேகந்தகமுங் கெவுரிதுத்தம்
தாளகமும்நிமிளையுடன் சூதந்தானும்
பண்ணவேதங்கமென்ற ரேக்கைதானும்
பலமரைதான்விதமடா சேர்த்திடாயே. 90

சேர்த்திட்டுக்கல்வத்திற் பொடியாய்ப்பண்ணி
செந்தருக்கம்பூச்சாற்றை திரளாய்வார்த்து
கைத்திட்டமாகவொரு நான்குசாமம்
கடுகவரைமறுநாளிற் சொல்லக்கேளு

---

* குருக்குவிரை - பிரமத்தண்டு விரை. § மதியில் - வெள்ளியில்.

வைத்திட்டசெயநீரால் ஜாமநான்கு
வரிசைபெறத்தானரைத்துச் சொல்லக்கேளு
பொய்த்திட்டுப்போகாமற் றுலரவைத்துப்
பொடிபண்ணிகாசியுட மேரும்போதே.

ஏத்தவேமுன்போலத் தாளிக்குள்ளே
யென்மகனேமணலிட்டுக் குப்பிவைத்து
ஆத்தவேமுன்போலத் தீயைமூட்டு
அப்பனேபனிரெண்டு சாமமானல்
மாத்தவேதீயதனை நிறுத்திப்போடு
மறுநாளிற்குப்பியைநீ வெளியில்வாங்கே
காத்தருளவேணுமென்று தேவிமுன்னே
கடுகமென்றசெந்தூரம் வைத்திடாயே.

வைக்கவேதேவியது சக்கிரத்தின்முன்
வாமம்வைத்தும்பூசைபண்ணி மனதுகூர்ந்து
மெய்ர்கவேரிஷிசித்தர் முனிவர்க்கெல்லாம்
வேதாந்தபூரணியை தியானஞ்செய்தால்
தைக்கவேசொர்னமென்ற சிமிளில்வைத்து
தானெடுப்பாய்செந்தூரம் விராகனென்று
கைக்கவேசெம்பதனைச் சுத்திசெய்து
கனகமதையைந்நூற்றுக் கொன்றுபோடே.

போடவேமாற்றதுவும் பதின்மூன்றாகும்
போக்கோடேவெள்ளியி லாயிரத்துக்கொன்று
நாடவேமாற்றதுவு மிருபதாகும்
நாதாந்தசத்தியவ ளுட்டத்தாலே
சாடவேலிங்கமென்ற செந்தூரத்தைச்
சொல்லவேகுன்றநீ யுண்டானல்
வாடவேவேண்டாங்காண் காயசித்தி
மைந்தனேகெவுனசித்தி யாகுந்தானே.

## துருசுச் சுன்னம்

தானென்றதுருசினது சுன்னங்கேளு
சமுசயங்களெண்ணுதே தாயைப்பூசி
வானென்றதுருசமது பலந்தானென்று
மைந்தனேகொண்டுவந்து சொல்லக்கேளு

* பானென்றஜெயநீரிற் ரேய்த்துத்தோய்த்து
பத்துநாளிரவிதனிற் போட்டாயானல்
கானென்றசுண்ணமதை யென்னசொல்வோம்
கடுரவியில்வைத்தவுடன் சுண்ணமாமே. 95

சுண்ணமென்றதுருசியைத்தா னெடுத்துக்கொண்டு
சொல்லுவேன்கல்வத்திற் கொட்டியாட்டி
முன்னமென்றகருவதனிற் காசுபோடு
மூர்க்கமென்றசெயநீரை விட்டேயாட்டு
ண்ணமென்னகாரமதை யென்னசொல்வேன்
மைந்தனேபட்டவிடம் வெந்துபோகும்
ண்ணவேயிச்சுண்ணந் தனையெடுத்து
காளகண்டவயிரவனைப் பூசைபண்ணே 96

வைரவன் பூசை

சையிலேவைரவன் பூசையைக்கேள்
புகழ்பெரியநாதாக்கள் சொல்லார்சொல்லார்
சைகொண்டுபூசையது செய்யவென்றால்
அப்பனேயென்கோண மிட்டுத்திரு
ஷைதனிற்கோடியுண்டு லக்கோயில்லை
பாடினதோர்சக்கரங்க ளனேகமுண்டு
சையிலேயித்தொழிலைப் பேசுவாரோ
பிரலாபஞ்சொர்னமென்றப் ‡ பீசந்தானே. 97

தானேதான்சொர்னமென்ற வயிரவத்தியானஞ்
சாற்றுகிறேனட்சரங்கள் சரிநின்றாட
வானேதான்சொலித்ததுபோல் வாதவித்தை
வகையானவஷ்டகர்ம சித்தியெல்லாஞ்
சேனேதானனேகமுண்டு கர்மவித்தை
செய்வதற்குச்சொர்னவயி ரவனைப்பூசி
ானேநீயென்றுசொல் லென்கோணத்துள்ளே
நாட்டுவாய்சக்கரத்தை நாட்டுவாயே. 98

ாட்டுவாய்நடுமையம் ஹிம்மென்றுபோடு
நலமானகிழ்த்திசையில் யம்மென்றுபோடு

---

பானென்றது - சூரியன், நெருப்புத் திராவகம். ‡ பீசம் - அக்ஷரம்.

ஊட்டுவாயக்கினியின் மூலேதன்னி
    லுத்தமனே இம்மென்று வதிலேபோடு
நாட்டுவாய்தென்றிசையி லம்மென்றுபோடு
    கருவானமூலேயிலே வம்மென்றுபோடு
சூட்டுவாய்மேற்றிசையி லிம்மென்றுபோடு
    சொற்பெரியகுபேரனிலே உம்மென்றுபோடே.

போடவேவடதிசையில் ஸ்தம்மென்றுபோடு
    போக்கோடேமூலேயிலே கூம்உம்மென்றுபோடு
நாடவேயதின்மேலே ரண்டுவறையிட்டு
    நன்மைபெறவாசல்களும் நான்குவிட்டு
கூடவேணுமென்று சக்கரந்தான்
    குறிப்புடனே தங்கமென்ற தகட்டிற்கீறி
ஆடவேவேணுமென்று தொழில்கட்பூட்டி
    அர்ச்சனேக்குவிபரமதை யறிகிறேனே.

அறைகிறேன்மந்திரம்ஓம் சொர்னவயிரவா
    அப்பனேயிப்படிநீ தியானஞ்செய்ய
பறையுறேனுயிரத்தெட் டுருத்தான்போடு
    பகிரண்டவயிரமுஞ் சித்தியாகும்
அறைகிறேனென்றுசொன்னேன் மந்திரத்தோடு
    அப்பனேயட்டசித்து வஞ்சனமுமப்பா
கறைகின்றவுப்புமுதல் வாதப்போக்குங்
    கைகண்டசித்தியடா கண்டுபாரே.

கண்டுமேசக்கரத்தை முன்னேவைத்து
    கடினமாய்கியானத்தை செய்துக்கொண்டு
கண்டுமேசொன்னபடி செய்தாயானல்
    பாதங்கள்சொல்லுகிறே னின்னங்கேளு
கண்டுமேவாமமொடு சுத்திவைத்து
    கனகம்போற்பூசையைநீ செய்யவேணும்
அண்டுமேவண்ணமொடு பலகாரங்கள்
    அதிகமாய்வடபருப்பு பாணகங்கள்
பண்டுமேயெனேயாண்ட குருவேயென்று
    பாக்கிலேயுந்தேக்கிலேயிற் படைத்திடாயே.

படைத்துமேதீபமொடு தூபம்காட்டி
பரமகுருநாதனெனப் பணிந்துபோற்றி
மடைத்தனமாய்த்திரியாதே வயிரவத்தின்பூசை
மறந்துவிட்டாலெத்தொழிலு மயக்கமாகும்
அடைத்ததொருவட்சரங்க ளனேகமுண்டு
அந்தந்தவிடங்களிலே யாருஞ்சொல்லார்
கடத்ததொருமறப்பில்லா துங்களுக்கு
சாற்றுவேன்வைரவத்தின் பூசைதானே. 103

தானென்றவயிரவர்க ளெட்டுபேரும்
தனித்துமேசக்கரத்தில் நின்றுபூசை
்ானென்றஅட்டமா சித்தியெட்டும்
மைந்தனேவயிரவர்க ளெட்டுபேரால்
்கானென்றநீயிவர்க டன்னைபூசி
கூடிவருமட்டசித்தி கைக்குள்ளாகுந்
தனென்றவமிர்தமடா விந்தபூசை
தேவிசொல்லநாம்செய்த திறமிதானே. 104

்றமானபூசையிலே மனதேவைத்து
சித்திதரவேணுமென்று தியானஞ்செய்து
்மானஉன்மனதை பேதியாதே
ஓகோகோருத்திரனு முண்மைசொல்வார்
பரமானபரமகுரு தன்னைநீயும்
பணிந்துமேபாத்திரங்கள் வழங்கச்செய்து
சரமானசூரியனிற் பூசைபண்ணி
தான்வாங்குதுரிசினது சுண்ணந்தானே. 105

்ன்னமென்றசுன்னமதைப் பதனம்பண்ணி
சூட்டுகிறேனிதையெடுத்து தொழிலுமாட
கன்னமென்றகன்னக்கோ லிதுவுமாகுங்
காட்டுவேனிதின்பெருமை கைக்கொள்ளாது
சொன்னதொருசூதமொரு பலந்தானென்றில்
சூட்டுவேன்துருசினது சுன்னந்தானும்
என்னவேபணவிடைதா னெடுத்துக்கொண்டு
இதமானசூதமதி லிட்டுத்தாக்கே. 106

தாக்கவேவாய்நீராக விட்டுத்தாக்கு
　　தட்டுண்டுசூதத்து சட்டிப்போகும்
பார்க்கவேவழித்தெடுத்துக் குகையில்வைத்து
　　பக்குவமாய்மூன்றெருவிற் புடத்தைப்போக்கி
சேர்க்கவேமணியதுதான் கதிர்போல்வீசும்
　　சிவசிவாரசமணியின் திறமைதன்னை
ஆர்க்கவேயாராலு மறியப்போமோ
　　அரனுடையவிந்துவதி னுண்மைதானே.

தானேதானின்றதொரு சூதந்தன்னை
　　சாற்றுகிறேன்கெவுனமதிற் றூண்டியோட
மானேதான்தரித்தசிவன் விந்தின்போக்கை
　　மறைத்தார்கள்சித்தரெலாம் வாய்பேசாமல்
சேனேதான்மெத்தவுண்டு பூமிதன்னில்
　　சிவசூதங்கொடித்தாக்கான் மெத்தநன்று
ஊனேதான்பிறந்தெடுத்த சூதமானால்
　　உயர்த்தியடாமெத்தநன்று வுண்மைதானே.

## கருவூமத்தின் விபரம்

உண்மையென்றசூதமது கிடையாவிட்டா
　　லுத்தமனேபரங்கிவைப்பு லிங்கஞ்சூதந்
தண்மைபெறத்தானெடுத்து மணியாய்ச்செய்நீ
　　தாண்டுமேடாயண்டவரை கிணற்றிற்றூனும்
வண்மைபெறமணியெடுத்து சாரணையைத்தீர
　　மாட்டுகிறேனுதாக்கண் மறைப்பையெல்லாம்
பண்மைபெறச்சொல்லுகிறேன் கருவூமத்தம்
　　பாகமதையினிவிபரம் பாரும்பாரே.

பாரேநீகருவூமத்தின் பாகமேதோவென்றால்
　　பைங்கொடியாட்கெற்பமடா மூன்றுங்கெற்பம்
காரேநீகொண்டுவந்து கத்தியாலே
　　கடுகதுபோல்கண்டித்துச் சொல்லக்கேளு
சேரேநீசூடனது பலந்தானைந்து
　　திறமானவெண்காரம் பலந்தான்மூன்று
வாரேநீவெடியுப்பு சாரஞ்சீனம்
　　வகைவகைக்குபலமொன்று மாட்டிடாயே.

மாட்டியேபிண்டமதி விரேகித்தேதா
 மைந்தனேயயச்சட்டிக் குள்ளேவைத்து
ஆட்டியேவடுப்பெரிநீ மெழுகாய்போகும்
 அப்பனேயதையெடுத்து வைத்துக்கொண்டு
ஊட்டியேகவசமிட்டு மணிக்குத்தானம்
 உத்தமனே நூற்றிருபத் தொன்றுபோடு
காட்டியேகொடுக்காதே யார்க்கானாலும்
 கருவுமந்தின்கருவைக் காட்டொண்ணாதே. 111

## ஆணையிட்டது

ஒண்ணானகருவினது விபரஞ்சொன்னேன்
 உத்தமனேயிதின்விவர மொருவர்சொல்லார்
கண்ணானபேர்களுக்குச் சொன்னாயானால்
 கண்கெட்டுமுன்சிரசு வெடித்துப்போகும்
என்னாணையென்றுமிகச் சாபமிட்டேன்
 இட்டதினாற்பயந்தார்கள் சித்தரெல்லாம்
உன்னாணைபூசித்து வெடுக்கவென்றால்
 முறைசொன்னாரென்குருவும் புசண்டர்தாமே. 112

## இரசமணிக்கு சத்து ஊட்டும் வகை

தானென்றமணிக்குநீ சாரணையைத்தீர்ந்தால்
 சத்துவகையூட்டுகிற விபரங்கேளு
ஊனென்றபூநாக சத்துவொன்று
 உத்தமனேதாளகத்தின் சத்துவொன்று
வானென்றவுபசரங்க ளிருநூற்றைப்பத்து
 வகையானபாஷாண மறுபத்துநான்கும்
கானென்றவுப்புவகை யிருபத்தைந்து
 நன்மையாகநவலோக மொன்பதுவுமாமே. 113

ஆகுமேமூலிகையின் சத்தோடொக்க
 அப்பனேநவமென்ற பாஷாணந்தான்
போகுமேசத்துகளை யெடுத்துக்கொண்டு
 புகழ்பெரியசூதமணி பலமொன்றுக்கு
தாகுமேகுகைதனில்வைத் துருகும்போது
 சரிசமனாய்க்கொடுத்துவிடு பூநாகச்செம்பு
வேகுமேயண்டமெலா மதியினாலே
 வெகுகோடியுருத்திரன்போல் விளங்குந்தானே. 114

விளங்குதேரசமணிதா னுருகும்போது
விரவியிடுயிந்திரமாங் கோபச்செய்கை
குழுங்கியேதவளைப்போ லுள்ளக்கொள்ளும்
மூர்க்கமுடன்கோபமுண்டோ முறையாது
களங்கில்லாசத்துகளைப் பின்னுலூட்டு
கடுவேகமாகுமடா கெவுனத்துள்ளே
உளங்கவேமணிதனுக்கு சங்குசத்தை
யூட்டினுல்கெவுனமதில் யோசையாமே.

ஓசையென்ருல்வெகுவோசை சங்கினேசை
ஓகோகோமதயானை வோடும்வேகம்
மூசையிலேயடைந்திருந்த காற்றைப்போலே
முழிக்குமுன்னைக்கோடிவரை முழுதுந்தாண்டும்
பாழையிலேபரிபாஷை கருக்களெல்லாம்
பாடிவைத்தேனின் னூல்தான் பதனஞ்சொன்னேன்
பேசையிலேயிப்பொருளைச் சொன்னுயானுல்
பிசகுவருமுந்தனுக்கு பேணிப்பாரே.

பாரப்பாவிம்மணிக்கு வாத்தாள்பூசை
பாங்குபெறச்செய்துநீ சொல்லக்கேளு
சேரப்பாவயிரவன்றன் பூசையாலும்
சித்தியடாயிதின்பெருமை செப்பொணுது
ஆரப்பாவெனைப்போல சொன்னுரில்லை
ஆச்சரியமணியோசை யென்னசொல்வேன்
பேரப்பாபேறதெல்லா மிரசத்தின்பேறு
பெருமையிதின்முடிவுசொல்ல போகாதென்னே.

## இரசச்சிந்தூரம்

போராதசத்தினது செந்தூரத்தைப்
பூட்டுகிறேன்காயசித்தி பொருளுண்டாக
வேகாதசத்தினது மணிதானென்று
விளங்கியதோர் தங்கமென்று கெவுரிகாலுஞ்
சாகாதநாகமொன்று விராகனென்று
தண்மையாங்கந்தகந் தாளகமுங்கூட்டி
நோகாதவெடியுப்பு நாலுங்கேளு
நுண்மையாம்பலங்கா லாயவிதங்கூட்டே.

கூட்டிலேகல்வத்தி லிட்டுக்கொண்டு
குமறவேமாதளம்பூச் சாற்றினலே
ஆட்டியேநாற்சாம மானபின்பு
அப்பனேரவியில்வைத்து பொடியாய்ப்பண்ணி
ஊட்டியே * காசியென்ற மேரிற்றனும்
உத்தமனே § வாலுகையின் மேலேவைத்து
மாட்டியேநீயெரிப்பாய் நான்குசாமம்
மைந்தனேயிராக்கால மாறப்போடே. 119

போடவேயிப்படியே மூன்றுநாட்டான்
புகழ்பெறவேபன்னிரண்டு ஜாமமானல்
நாடவேநாலாநா ளிறக்கிப்பாரு
நன்மையென்றசெந்தூர மென்னசொல்வேன்
தேடவேவருணன்போற் சிவந்துகாணும்
சிவசிவாவிதன்பெருமை செப்பொணுது
ஆடவேவேணுமென்றுளாத்தாள்மாண்பு
ஆர்ச்சித்துபூசைசெய்து வப்பால்வையே. 120

வைக்கவேவடுவுக்குப் பூசைபண்ணி
மைந்தனேசெந்தூரங் குன்றியுண்ணு
மெய்க்கவேயுன்திரேக மென்னசொல்வேன்
வெண்மதிபோலாகுமடா மண்டலத்தில்
தைக்கவேவெள்ளியிலா யிரத்துக்கொன்று
தானிடவேயிருபத்தைந் தாகுமாற்று
எய்க்கவேவேணுமென்றல் செம்புதன்னில்
யீந்திடுவாயைந்நூற்றுக் கொன்றுதானே. 121

தானென்றமாற்றதுவும் பனிரெண்டாகும்
சாற்றுவேனிதன்விபர மின்னங்கேளு
பானென்றமதிபோல நவலோகங்கள்
பழுக்குமடா நூற்றுக்கு வொன்றுதாக்கு
ஊனென்றவிதன்பெருமை யாருஞ்சொல்லார்
உரைத்தேனேமனிதரெல்லாம் பிழைக்கவென்று
கானேனுனென்றுசொல்லி விட்டிடாதே
கருத்துகந்துவைந்நூறும் பாருபாரே. 122

* காசி - காசிகும்பி. § வாலுகை - அடுப்பு.

பார்க்கவேசொல்லுகிறே னுகந்தன்னை
பலம்பத்துதானெடுத்து சொல்லக்கேளு
ஆர்க்கவேசாரநீற் றன்னிலேதான்
அப்பனேயைந்து முருக்கிச்சாய்த்து
ஏர்க்கவேதானெடுப்பாய் கட்டிப்போகும்
என்மக்காணுதத்தின் பெருமைகேளு
சேர்க்கவேகட்டியதோர் நாகந்தன்னைப்
செப்புகின்றவிபரமதைச் செப்புறேனே. 123

செப்புகிறேன்கட்டியதோர் நாகந்தன்னை
திரளவேபலமொன்று கைக்குள்வைத்து
முப்புறமேதானெரித்த * வீசன்விந்து
முண்மையென்றதங்கமடா பலந்தானென்று
தப்புகிறேனென்றாலுந் தப்பப்போமோ
தாயுடையவிந்துவடா கெந்திதானும்
உப்பென்றவெடியுப்பு நாலாங்காய்ச்சல்
உறுதிபெறத்தானெடுத்துச் சொல்லக்கேளே. 124

கேளடாநாகத்தை யுருக்கிக்கொண்டு
கெட்டியாய்த்தங்கத்தை யதிலேசேர்த்து
கோளடாவாராமற் கல்வத்திட்டு
கொட்டினால்தூளதுபோ லாகும்பாரு
பாழடாபோகாது சரக்கெல்லாந்தான்
பலங்கால்தான்வீதமடா யெடுத்துக்கொண்டு
வேளடாயெரித்த § சிவன் மூலிச்சாற்றால்
விட்டரைப்பாய்சாமமது நான்குதானே. 125

தானென்றநால்சாம மறைத்தபின்பு
தான்ரவியில்காய்ந்தபின்பு சொல்லக்கேளு
மானென்றபொடியாக்கி மேருக்கேற்றி
மைந்தனேவாலுகையில் வைத்துநீயும்
கோனென்றமுன்போல வெரிநீயப்பா
குமறவேபனிரண்டு சாமந்தீயை
பானென்றகுளிரவிட்டு நான்காளிற்
பார்வதியைப்பூசைபண்ணி யப்பால்வாங்கே. 226

---

* ஈசன் விந்து - இரசம். § சிவன்மூலி - சிவனார் வேம்பு.

வாங்கியதோர்சிந்தூர மென்னசொல்வேன்
மைந்தனேகொஞ்சிவப்பு கண்ணோகூசுந்
தாங்கியேதானெடுத்துக் குன்றியுண்ணு
தப்பாதுகாயசித்தி யிதுவேயாகும்
ஏங்கியேதிரியாதே நவலோகங்கள்
என்னசொல்வேன்பத்தரைக்கு யேறுமாற்று
பாங்கியெனுமென்தாயார் சொல்லநானும்
பரிபாஷைகருநீக்கிப் பாடினேனே. 127

நாககுப்பி செயநீர்

பாடியதோர்வகையேது வின்னங்கேளும்
பலம்பத்துநாகமதை யுருக்கிக்கொண்டு
கூடியேவருகவென்று மிரசத்தைவாங்கி
கூட்டவேபலமூன்று மொன்றுய்ச்சேர்த்து
நாடியேகல்வத்திலிட்டுக்கொண்டு
நவசாரசெயநீரை விட்டுஆட்டி
சாடியேநாற்சாம மரைத்தாயானல்
தான்மெழுகாம்பதமதிலே வட்டுப்பண்ணே. 128

பண்ணியேரவிமுகத்திற் காயவைத்துப்
பருஞ்சுக்கான்சுண்ணம்பி னடுவேவைத்து
எண்ணியேயெருவைந்துப் புடத்தைப்போடு
யென்னசொல்வேன்சுண்ணமென்றுற் கொடியவேக
வள்ளியென்றுஞ்சாரமென்றும் பச்சையைந்து
மைந்தனேசுன்னமைந்தும் வகையாய்க்கூட்டி
உன்னியேசீனமுடன் வெடியுப்புங்கார
முத்தமனேவகைவகைக்குப் பலமுங்காலே. 129

நாலானவகையெல்லா மொன்றுய்ச்சேர்த்துக்
கல்வமதிற்றுனரைக்க கருவைக்கேளும்
பாலானபாலாகுஞ் சதுரக்கள்ளிப்
பாலதினுற்றுனரைத்துப் பாகங்கேளுஞ்
சாலானபீங்கானி லப்பிமீயுந்
தண்மைபெறப்பனிதனிலே வைத்தாயானல்
வாலானவாருதியாம் பீங்கான்றன்னில்
வந்திறங்குஞ்செயநீரும் வாங்குவாயே. 130

வாங்கியேபீங்கானில் வைத்துக்கொண்டு
மைந்தனேதேவிமுன்பு பூசைசெய்து
தூங்கியேதிரியாதே செம்புதன்னைச்
சுத்திசெய்துசெயநீரில் வைத்துக்கொண்டு
தாங்கியேபத்தெருவிற் புடத்தைப்போடு
தப்பாதுமாற்றென்னுவா றரையுங்காணும்
நீங்கியேபோகாது யிந்தவேதை
நினைவுவைத்தாத்தாளைப் பூசைபண்ணே. 131

## காரீயச் செந்தூரம்

எண்ணவேகாரீயக் கட்டிவாங்கிப்
பருதியென்றசெயநீரி லுருக்கிச்சாய்த்து
கண்ணவேயைந்துதிரஞ் சாய்த்தாயானற்
வட்டுமடாகாரீயங் கனகமாகுஞ்
சொன்னதொருகட்டியது வெட்டையாகுந்
துடியடக்ககல்வமதி விட்டுக்கேளும்
எண்ணமுடன்தானிடிக்க நொறுங்கிப்போகு
மிதினுடனேசேர்க்கும்வகை யின்னங்கேளே. 132

கேளேநீசெயநீரை விட்டேயாட்டி
கேவலமாநினையாதே விபரஞ்சேர்த்து
வாளேநீபூரமதற் சூடம்பூரம்
வரிசைபெற்றவெடியுப்பு வகையொன்றுக்குக்
கோளேநீவாராமற் கழஞ்சியொன்று
கொடியதொருகாரியங்க ளஞ்சிமூன்றும்
பாளேநீபோகாம லரைத்துநீயும்
பருவமுடன்மெழுகாகும் பதத்தில்வாங்கே. 133

பதத்திலேவாங்கியல்லோ வட்டாய்ப்பண்ணி
பண்பானபூநீறுங் கல்லுப்புச்சுண்ணம்
நிதத்திலேசமனுக வெடுத்துக்கொண்டு
நேர்ப்பாகவகலதனிற் பரப்பிவைத்து
மதத்திலேமாண்டதொரு வங்கந்தன்னை
மைந்தனேநடுமையம் வைத்துப்போற்றி
செகத்திலேபோகாமல் சீலைமண்செய்
சிறப்பாகப்பத்தெருவிற் புடத்தைப்போடே. 134

புடத்திலேபோட்டவுட னீறும்ப்போகும்
போமடாசுண்ணமது வேகமைந்தா
தடத்திலேவெறிகொண்ட யானைக்கொக்குந்
தள்ளாடுஞ்சிங்கியடா வாதத்துக்கு
கொடத்திலேகட்டிவைத்த வரவம்போலக்
கொதிக்குமடாசரக்குகளைக் கண்டபோது
சடத்திலேயிதுவுமொரு சடலமாகுந்
தாயானவங்கத்தின் றன்மைதானே. 135

## சிங்கி சுண்ணம்

தண்மையென்றவங்கத்தின் சுண்ணந்தன்னை
தானரைத்துப்பூசிவிடு சிங்கிக்கப்பா
வண்மையென்றவெருக்கிலையின் தன்பழுப்பு
மைந்தனேதானரைத்துப் பூசும்போது
வெண்மையென்றவெருக்கிலையின் தன்பழுப்பு
வெகுசுருக்கில்வாதமது விள்ளப்போமோ
ஒண்மையென்றசுண்ணமிதிற் கோடிதொந்தம்
ஓகோகோசொல்லரிது வுரைத்தேன்பாரே. 136

உரைக்கவேயின்னமொரு சேதிகேளு
முத்தமனே * வெள்ளையொரு பலந்தான்மூன்று
மறைக்கவேயில்லையடா செயநீராலே
மைந்தனேசுருக்கிடுநீ ஜாமமொன்று
நிறைக்கவேயிறுகியது கட்டிப்போகும்
நேர்ப்பானவெள்ளியுட ரேக்கைச்சுத்தி
துரைக்குருவிற்பணவிடைதா னெடுத்துக்கொண்டு
சூட்டடாரேக்கதனி லின்னங்கேளே. 137

கேளடாபலமென்ற வோட்டைவாங்கி
கிருபைபெறவுவர்மண்ணிற் கொதிக்கவைத்து
கோளடாவாராமல் பலந்தானிரண்டுங்
கூட்டுவாயானைக்கற் சிப்பிரண்டும்
வாளடாரெண்டுமொன்றாய்க் கல்வத்திட்டு
மைந்தனேயெரியாலம் பாலாலாட்டி
சூளடாகுகைபோல பண்ணிக்கொண்டு
துப்பரவாயதினடுவிற் கட்டிவையே. 138

---

* வெள்ளை - சங்கபாஷாணம்.

வைத்துமேயஞ்செருவிற் புடத்தைப்போடு
மருவியந்தரேக்குடனே யுருகிநிற்குஞ்
செத்துமேபோச்சுதடா பாஷாணந்தான்
செப்புகிறேன்வெள்வித்தை திறமதாக
அத்துநீபோகாதே வெள்ளீயத்தி
லப்பனேயைம்பதுக் கொன்றுபோடு
சத்தவெள்ளியிதற்கிடோ சொல்லப்போமோ
துப்புறவாய்மாற்றதுவும் பத்துமாச்சே. 139

## தாளகச் செந்தூரம்

ஆச்சப்பாயின்னமொரு கருவைக்கேளு
வப்பனேதாளகமு பலமுமூன்று
பேச்சப்பாபேசாதே கொண்டுவந்து
பிற்பலமாஞ்செயநீரிற் றுரேய்த்துக்கொண்டு
காச்சப்பாமூன்றுநாள் ரவியிற்போட
கண்டுண்டுபோவதற்கு வகையைக்கேளே
மூச்சப்பாயோடாமல் முப்பூசுண்ணம்
முழுக்கவசமாய்க்கட்டி குகையில்வையே. 140

கட்டியேமூன்றெருவிற் புடத்தைப்போடு
கட்டுண்டுவுருகியது மணிபோனிற்குங்
கெட்டியாய்த்தங்கமொரு பலத்தைவாங்கி
வ கிருபைபெறக்குகைதனிலே யுருகும்போது
மட்டில்[illegible] தாளகத்தை கொடுத்தாயானல்
வாய்பிளந்[illegible]வாங்குமடா தங்கந்தானும்
கொட்டியேகல்வமதி லா[illegible]டும்போது
குறுகுறுத்துமணல்போல நொறுங்கும்பாரே. 141

பாரப்பாநொறுங்கியதோர் தாளகத்தைப்
பக்குவமாய்ச்செந்தூரஞ் செய்யக்கேளும்
நேரப்பாகெவுரியுடன் கெந்திரூதம்
நேர்ப்பானவெடியுப்பு நிமிளைநாகம்
சேரப்பாயிவையெல்லாம் வகையொன்றுக்குச
செப்புவேன் * கழஞ்சிநிறை சேரக்கூட்டிப்
பேரப்பாமயிற்கொன்றைப் பூச்சாற்றாலே
பிரபலமாய்தானரைப்பாய் ஜாமம்நாலே. 142

* கழஞ்சி - நாற்பதுகுன்றியிடை.

நாலானசாம மரைத்தபின்பு
நன்றாகவட்டுப்போல் வில்லைப்பண்ணி
காலான்வோட்டில்வைத்துச் சீலைமண்செய்து
கனக்கவேயேழுசீலை செய்தபின்பு
ஆலானவஞ்செருவிற் புடத்தைப்போல
வப்பனேநீயறிய துசிந்துரிக்குஞ்
சூலானசூன்மிகுந்து கெற்பம்போல
சொலிக்குமடாவாதமிதி வின்னங்கேளே. 143

கேளடாவெள்ளிதனி னூற்றுக்கொன்று
கிருபைபெறத்தான்கொடுக்கச் சொல்லக்கேளு
வாளடாமாற்றென்ன விருபத்தைந்து
மைந்தனேகெம்பிலேதான் பத்துக்கொன்று
சூளடாகொடுத்திடவே மாற்றுபத்தாஞ்
சொல்லுவோம்நவலோக மெல்லாந்தங்கம்
கோளடாவாராது யிந்தப்போக்கு
குறிப்பாகமண்டலந்தான் பனங்காற்கொள்ளே. 144

கால்கொள்ளமண்டலத்திற் சித்தியாகுங்
கனகமிதில்வெகுகோடி காணலாகும்
மால்கொள்ளுமங்கையடா வரிதாரந்தான்
மைந்தனேயிதன்மெருமை யாருங்காணார்
நால்முகமாய்க்கொண்டதொரு பிர்மாவானு
நாயகியாணுகமதை யறியப்போமோ
பாலமுதுபோலேயடா யிந்தப்போக்குப்
பார்ப்பதற்குகெவுரியுட பாகங்கேளே. 145

## கெவுரி பாஷாணக் கட்டு

பாகமென்னகெவுரியொரு பலமேதூக்கிப்
பாச்சடாசெயநீரில் சுருக்குத்தாக்கி
தாகமென்னசாமமொன்றிற் கெவுரிகட்டும்
தணையெடுத்துகல்வத்தி லிட்டுக்கொண்டு
ஆகமென்னத்தாளகமுஞ் சிலையுங்கெந்தி
யப்பனேவெடியுப்பு நாகந்தானு
மேகமென்றரேக்கதுதான் வகையொன்றுக்கு
மென்னசொல்வோம் பலங்கால்யெடுத்திடாயே. 146

* சிலை - மனோசிலை

எடுத்துமேகல்வமதி லிட்டுக்கொண்டு
யென்னசொல்வேன்செம்பருத்தம் பூஞ்சார்விட்டுத்
தொடுத்துமேதானரைப்பாய் நாலுசாமங்
துவளவரைத்தேயுருட்டிக் காயப்போடு
அடுத்துமேபொடிபண்ணிச் சொல்லக்கேளு
மப்பனேகாசியென்ற மேருக்கேற்றி
விடுத்ததொருவாலுகையின் மேலேவைத்து
விபரமாய்முன்போலே * தாளிக்கேத்த. 147

ஏத்தவேதாளிக்குண் மணலைக்கொட்டி
யென்மகனேரெண்டுவிரற் கனந்தானையா
ஆத்தவேஉப்புநன்றாய் பொடித்துக்கொண்டு
வப்பனேமுன்சொன்ன கனமேபோட்டு
காத்தவுடன்குப்பியைநீ சுத்திக்கட்டிக்
கனக்கவேமணற்கொட்டிக் கழுத்துமட்டுஞ்
சேத்தருளவேண்டுமென்று தாயைப்பூசி
சிறக்கவேஅக்கினியைத் திரும்பமூட்டே. 148

மூட்டயிலேதீபம்போற் கனலைமூட்டு
முதற்சாமங்கடந்தபின் யிரண்டாஞ்சாம
மாட்டயிலேகமலம்போ லெரிநேர்ப்பாக
வப்பனேயிருசாம் மானபின்பு
ஊட்டயிலேகடினமென் றக்கினியைக்கேளு
முத்தமனேயாறவிட்டு திரும்பமூட்டு
நாட்டயிலேயிராக்கால மாறப்போடு
நாலாநாட்குப்பிதனை வெளியில்வாங்கே. 149

வாங்கடாகுப்பிதனை யாத்தாள்முன்பு
வடுகனையும்பூசைபண்ணி சொல்லக்கேளு
தாங்கடாயவள்பதத்தை யிருகையாலே
தாமரையின்பூவதினு லர்ச்சனையுஞ்செய்து
தேங்கடாவாசியைநீ யிழுத்துவாங்கிச்
சிவசிவா தூபமொடு தீபங்காட்டி
பாங்கானசெந்தூரங் குன்றியுண்ணப்
பருவமதுயென்னசொல்வேன் பரைசொல்வாளே. 150

---

* தாளி - மிடா.

சொன்னதொருமண்டலமே கொண்டாயானால்
சோதியடாவுன்தேகஞ் சொல்லப்போமோ
கண்ணுடாச்செந்தூரஞ் சித்தருக்குக்
கருத்திறந்துயான்சொன்னேன் கண்டுபாரு
அன்னமென்றபச்சரிசிப் பாலுங்கூட்டி
யப்பனேபத்தியமாய்க் கொண்டுவாநீ
என்னவேநரம்பெல்லா மிறுக்கிக்கொள்ளு
மிதுக்கடுத்தகற்பமொன்று மீடாகாதே. 151

ஆகாதகற்பங்க ளனேகமுண்டு
வதிற்றெளிந்துசொல்லிவிட்டேன் யானுமய்யா
போகாதுகில்களை விபுமாட்டாது
போக்கதிலேசொல்லுகிறே னின்னங்கேளு
நோகாதுசடலமதுப் பேதியாது
நொந்தாலுமிருகுமடா செந்தூரந்தான்
சாகாதுகருவியெல்லா மொன்ருய்ப்போகுந்
தாய்கொடுக்கயானுண்டேன் றண்மைதானே. 152

தண்மையென்றசெந்தூரம் வெள்ளிதன்னிற்
ருனிடுவாயாயிரத்துக் கொன்றுதானும்
உண்மையென்றமாற்றென்ன விருபத்தஞ்சு
உத்தமனேசெம்புதா னிரும்பதாகும்
நன்மையென்ற * குடவனிலை பத்தரையுமாகும்
நாட்டினேன்நவலோக மெல்லாந்தங்கம்
வண்மைபெறச்சொல்லிவிட்டே னிந்தநூலின்
மார்க்கங்களின்னமுண்டு மருவுங்காணே. 153

கந்தக பற்பம்

காணவேகந்தகந்தான் பலமூன்று
கருணைபெற்றமுப்புவின் விராகன்மூன்று
தோணவேரண்டையுந்தா னேட்டிவிட்டு
துப்புறவாய்நெருப்பிலிட்டு வறுத்திட்டேதான்
பேணவேவெந்துருகிப் பற்பமாகும்
பேசாதேயின்பெடுத்துக் கல்வத்திட்டு
ஊணவேதாளகத்தைச் சரியாய்க்கூட்டி
யுத்தமனேநாகமது பலமுங்காலே. 154

* குடவன் - பித்தளை.

காலானவெடியுப்பு விராகனென்று
　கனகமெனுந்தங்கமொன்று ரேக்கதொன்று
பாலானசூதமடா விராகனஞ்சு
　பதிவானகெவுரியுமோ விராகன்ரெண்டு
சேலானதுருசுமே விராகனென்று
　சேரவொண்ணகல்வத்தி லிட்டுக்கொண்டு
மாலானமூலிகையாம் விஷ்ணுகாந்தி
　மைந்தனேசாற்றினு லாட்டுவாயே. 155

ஆட்டியேயெண்சாம மரைத்தபின்பு
　அப்பனே * ரவிமுகத்திற் காயவைத்து
சூட்டியேபொடிபோ லரைத்துக்கொண்டு
　சொல்லுவேன்காசியென்ற பேருக்கேற்றி
நாட்டியே § வாலுகையிற் றுளிக்குள்ளே
　நன்றாகமுன்போலே வைத்துக்கொண்டு
மாட்டியேதீயிடுவாய் பனிரண்டுசாமம்
　மைந்தனேஆட்டிவிட்டாப் பால்வாங்கே. 156

வாங்கியேகுப்பியைத்தா னுடைத்துப்பாரு
　மைந்தனேசெந்தூர மருணன்போலாம்
தாங்கியேவெள்ளியென்ற சிமிளில்வைத்து
　தானந்தவைரவனை பூசைபண்ணி
தூங்கியேதிரியாதே குன்றியுண்ணு
　சொர்னமடாவுன்தேகஞ் சொல்லப்போமோ
நீங்கியேபோகுமப்பா ரோகமெல்லாம்
　நிட்சயமாயுன்தேக நிலைக்கும்பாரே. 157

பாரப்பாசெந்தூர மாயிரத்துக்கொன்று
　படும்செம்புக்கொடுத்திடவே மாற்றுப்பத்து
நேரப்பாவெள்ளியிலே மூவாயிரத்துக்கொன்று
　சேர்ந்திடவேயிருபத் தஞ்சுமாற்று
பேரப்பாகந்தகந்தா னுயினாதம்
　பெருமையதில்சொல்ல வென்னுற்கூடா
நேரப்பாயிதன்பெருமை $ மூலநாயன்
　நிகண்டிலேசொல்லிவைத்தா ரின்னங்கேளே. 158

* ரவி - சூரியன். § வாலுகை - அடுப்பு. $ மூலநாயகன் - திருமூலம்.

## கந்தகத் தைலம்

இன்னமுந்தான்சொல்லுகிறேன் கந்தகந்தானப்பா
யென்மகனேபலமொன்று யெடுத்துக்கொண்டு
கன்னமுள்ளக் * கருங்குன்றி வித்தேவாங்கிக்
கலந்திடுவாய்ப்பலமொன்று கந்தகத்திலுள்ளே
சொன்னபடிகல்வத்தி லிட்டுக்கொண்டு
துவளவரைசேங்கொட்டைத் தைலந்தன்னு
லெண்ணவேநெல்லுப்போற் பில்லைபண்ணி
யிதமாக § பூப்புடத்திற் றைலம்வாங்கே 159

தைலமதுவாங்கியே முப்பூச்சேர்த்து
தனித்ததொருகந்தகந்தான் பலமும்வாங்கித்
தைலமதுபொல்லாது கந்தகத்துக்கப்பா
தாண்மையாய்ச்சுருக்கிடவே மெழுகுமாகுந்
தைலமதுபோலேயடா மெழுகுதானும்
தப்பாமற்பலமறைதான் ரேக்கேயூட்டு
கைலேமலைப்போலாடு மெழுகுதானுங்
கண்ணிமைக்குளண்டமெல்லாம் பொன்னுய்ப்போமே. 160

போகுமேமண்ணுமுதல் மலேகளெல்லாம்
பொன்மயமாய்ப்போகுமடா புகைபட்டாக்காற்
சாகுமேசரக்குள்ளே கட்டிக்கொள்ளுந்
தனித்தனியேவேதையது வோடும்பாரு
வேகுமேயண்டமெல்லாஞ் சுண்ணக்காடாய்
வெகுசுறுக்காய்ச்சொல்லிவைத்தே னிந்தநூலி
லாகுமேமெழுகுவதை செந்தூரம்போக்கு
மப்பனேகந்திவிட்டா லாகாதென்னே. 161

என்னவேவாதமுறை கருக்களெல்லா
மியம்பினேமன்னூத்திற் றெளிவதாக
சொன்னதொருகாரியங் கடிதற்கீடாச்சி
சொல்லிவைத்தேன் வேதாந்தமிதுக்கிடல்லா
முன்னோர்கள்கட்டினதோர் சாஸ்திரங்களெல்லா
முன்பின்னுய்த்தெரியாது மோசங்காணுங்
கண்ணுனசாஸ்திரங்கள் கோடியுண்டு
கருக்குருவுந்தெரியாமற் கட்டினுரே. 162

* கருங்குன்றி - கறுப்புக்குண்டுமணி. § பூப்புடம் - குழிப்புடம்.

## சட்டமுனி

கட்டியதோர்காரியங்கள் பார்த்துபார்த்து
கருக்கிடையாய்தோணுமற் கலங்கினார்கள்
ஒட்டிவைத்தசாஸ்திரங்கள் கோடியுண்டு
வொருவருக்குந்தெரியாம லலைந்தார்கோடி
வெட்டைவெளியாகவேதான் சட்டைநாதர்
விளம்பினார்தீட்சவிதி யிருநூற்றுள்ளே
தொட்டதொருகருக்களெல்லாம் வெள்ளையாய்ச்சொன்னார்
தொடுகுறிபோலாடுமடா யிந்தநூலே. 163

நூலானதீட்சவிதி யிருநூறுந்தான்
நொடிக்குமுன்னேபாடிவைத்தார் சட்டைநாதர்
சேலானதொன்றுமில்லை யிந்தநூலுஞ்
செப்பினேனிதனைவெகு தெளிவதாகப்
பாலானபாலதுபோல் வெண்மையாகப்
பாடினேன்மனிதரெல்லாம் பிழைக்கவென்று
காலானநூலறிந்து மூலநாயன்
கயிலாசவரையிற்போய்க் கூடினாரே 164

கூடியேசித்தரெல்லா மிருந்துக்கொண்டு
கூட்டிவந்தார்சட்டைமுனி நாதன்தன்னை
பாடினதோர்நூலெடுத்துப் படிக்கச்சொன்னார்
பயனெல்லாந்தானறிந்து கோபமாகி
யாடியதோரம்பலத்திற் கிழித்தார்பாரு
மப்போதுயென்னூலை புசண்டர்வாங்கிச்
சூடியதோர்சடாமகுடந் தன்னிலேதாஞ்
சொருகிவைத்தாரொருவருக்குந் தோணுதன்றே. 165

தோணுதுவென்றுசொல்லி யெடுத்துக்கொண்டு
சொக்கியேகுளிகையிட்டு பொதிகைமேவி
காணுதுவென்றுசொல்லி பொதிகநாதன்
கையிலேதான்கொடுத்தா ரன்னூர்தன்னை
யாணுதயாணுவத்தால் சொன்னாரென்று
மப்போதுகுகைதனிலே யொளித்தாரையா
வூணுதமவுனத்தைத் தியானஞ்செய்ய
வொருயுகந்தான்தொண்டுபண்ணி வாங்கினேனே. 166

வாங்கியேகமலமுனி தனக்குயீந்தேன்
வாய்த்துதென்றுமவர்தானு மடக்கஞ்செய்தார்
நீங்கியேபிரபஞ்சந் தன்னைவிட்டு
நிலையானசாஸ்திரத்தில் சித்தனுனர்
தாங்கியேபவருடைய மற்றோர்க்கெல்லாஞ்
சாற்றினுரைந்நூற்றின் விபரமெல்லாந்
தூங்கியேதிரியாதே இன்னூற்றன்னை
சோதித்தாற்கருக்களெல்லாந் தோணும்பாரே. 167

தோணுமேவாதமொடு ஞானஞ்சித்தி
சொல்தனக்குயெட்டாத மவுனஞ்சித்தி
யாணுமேகெவுனசித்தி காயசித்தி
யப்பனேயட்டமா சித்தியெல்லா
மூணுமேமனமதுதான் பேதியாம
லோகோகோகருக்களெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
கோணுமேசெகஜால மாய்கையெல்லாங்
கொடும்பாழாய்போகுமடா யின்னங்கேளே. 168

கருங்கோழி யண்டம்

கேளப்பாவண்டமதில் வித்தையொன்று
கேசரியாள்சொல்விவைத்தா ளெந்தனுக்கு
கோளடாவாராம லண்டமென்ற
கோழியடாகருங்கோழி கொண்டுவந்து
வாளடாகந்தகந்தான் சுத்திசெய்து
மைந்தனேபலமொன்று யாவிநெய்யால்
நாளடாவிட்டரைத் துருட்டிக்கொண்டு
நாண்மூன்றுகொடுத்துவிடு சுத்தியாமே. 169

சுத்தியாங்குக்குடத்திற் றிரேகமெல்லாஞ்
சூட்டுவோம்பின்புசெய்யும் வகையைக்கேளு
பத்தியாமவுரியிலைப் புதுசாய்ப்பார்த்து
பலங்காலாஞ் * சூரிவிதை விராகனென்று
முத்தியாமிரசமதுதான் களஞ்சியொன்று
மூர்க்கமுள்ளவழுத்துமா வுளஞ்சிமூன்று
அத்தியாமுகவனைத்தான் பணிந்துபோற்றி
யானியென்றகோழிக்கு மளித்திடாயே. 170

* சூரிவிதை - நத்தைசூரி வித்து.

அளித்துமேயிருபதுநா ளானபின்பு
வப்பனேரசமதனை யிரட்டித்தேத்து
களித்துமேநாற்பதுநா ளானபின்பு
சொல்லுவோம்ரசமதனை யதுக்கிரண்டு
மூளித்துமேதிரியாதே மோசமில்லை
மூற்கமுள்ளகோழிதன்னை யழித்துப்போட்டு
வளித்துமேமலங்களெல்லாம் எடுத்துக்கொண்டு
மைந்தனேதாளிக்குட் கரைத்திடாயே. 171

கரைத்துமேரசமதனை யெடுத்துக்கொண்டு
கண்டித்திரசமதிற் பாதிலிங்கங்கூட்டி
யுரைத்துமேவுழுந்துமாய்ச் சரியாய்கூட்டி
யுத்தமனேபலமொன்று ணுண்மூமுக
வரைத்துமேயிப்படியே சொலித்திவர்னி
வப்பனேமண்டலங்காற் கடந்தபின்பு
மரைத்துமேபோகாது மலத்தோடொக்க
மைந்தனேயிறங்குமடா ரசந்தான்பாரே. 172

பாரப்பாசந்தானுங் கட்டிப்போகும்
பருவமுடன்ரேக்கதனை யதற்குப்பாதி
சேரப்பாரசமணியைச் சுத்திகட்டி
சிமிள்போலேவெள்ளியிலே செய்துக்கொண்டு
காரப்பாவதில்வைத்து மேலேமூடி
கவுத்தியனேசீலைமண் ணேழுஞ்செய்து
ஆரப்பாமூன்றெருவிற் புடத்தைப்போடு
அப்பனேகட்டியது மணியுமாமே. 173

கட்டியதோர்மணியெடுத்து வெள்ளிசெம்பிற்
காட்டுவாய்பத்ததுக் கொன்றுபோடு
மொட்டியதோர்மாத்துவு மெட்டுமாகும்
வுத்தமனேயதன்பெருமை யுரைக்கப்போமோ
மட்டியாய்த்திரியாதே சொல்லக்கேளு
மைந்தனேசொல்லிவைத்தே னைந்நூற்றுக்கு
கெட்டியாய்சாஸ்திரத்தை யுற்றுப்பாருங்
கிருபையாயுன்மனது குருவுமாமே. 174

குருவானசாஸ்திரந்தா னைஞ்னூறும்பாரு
கொட்டினேன்கருவையெல்லா மிந்தநூலில்
குருவானகுருத்தேட வேண்டாம்நீயும்
உத்தமனேசாஸ்திரந்தான் குருநூலாகும்
திருவானமாதுவந்த நிர்த்தஞ்செய்வாள்
செகஜாலங்கூத்தைவிட்டுத் தெளிந்துநில்லுங்
கருவானசாஸ்திரத்தைப் பார்க்கும்போது
காற்றிருப்பானுரோமனென்றுங் கண்டுகொள்ளே. 175

## இரச செந்தூரம்

கொள்ளவேகோழியைத்தான் சோதித்தாக்காற்
குருவென்றிரசமதுதான் தியங்கிநிற்கும்
விள்ளவேயதையெடுத்துச் சொல்லக்கேளு
வெண்மையாங்குகையில்வைத்து யுறுக்கிப்பாரு
மள்ளவேயுருகியது மணிபோல்நிற்கும்
வப்பனேயதையெடுத்துச் சொல்லக்கேளுங்
கள்ளமென்றுயெண்ணாதே சொர்ன்னமைபா
கண்டிடைக்குச்சரிகூட்டி யுறுக்கிடாயே. 176

உருக்கியேசெந்தூர மாகச்சொல்வோ
முத்தமனேகெந்தியது நாலத்தொன்று
தருக்கியேதாளகந்தான் மூணத்தொண்ணுத்
தான்கூட்டிக்குதும்பைசார் தனைவிட்டாட்டி
முருக்கிலைசார்முச்சாம மறைத்துகொண்டு
முதிராமன்மெழுகுபோல் வட்டுப்பண்ணி
யருக்கியகலில்வைத்துப் புடத்தைப்போடு
யாத்தாட்கும்வடுகனுக்கும் பூசைபண்ணே. 177

## குதும்பை கூத்துங் குதம்பை

பண்ணியேசெந்தூரம் பணங்காலுண்ணும்
பறக்குமேநோயெல்லா மண்டலத்தி
லெண்ணியேகாசித்தி யென்னசொல்வேன்
யேழையுஞ்சொல்லிவிட்டே னைஞ்னூற்றுக்குஞ்
புண்ணியமேசெய்வதற்கு யின்னூற்கிட்டும்
போக்கோடேகருக்களெல்லாம் நன்ருய்த்தோணுங்

கண்ணிலேகண்டபொருள் தன்னைப்பேலே
காட்டுமடாகருக்கண்முறை வாதந்தானே. 178

தானென்றசெந்தூரம் வெள்ளிநூற்றில்
தாக்கிடவேமாத்தென்ன யெட்டுமாகு
மூனென்ற*குடவனிலே பத்துக்கொன்று
முத்தமனேகொடுத்திடவே யாறுமாத்தா
மேனென்றசாத்திரங்கண் மெத்தவுண்டு
யிதமாகநாள்பார்த்தப் படியேசொன்னேன்
தேனென்றயமிர்தமடா யிந்தநூலு
செப்பினேன்சாத்திரத்தில் தெளிந்துநானே. 179

## வெடியுப்புச் சுண்ணம்

தெளிந்துமேசொல்லுகிறே னின்னங்கேளுந்
திரமானவெடியுப்பு செயநீர்தன்னை
னெழிந்ததொருவெடியுப்பு யைந்தாங்காச்சன்
மோகமிதுசொல்லுகிறே முப்பூவின்போக்கு
கனிந்ததொருவுப்பென்று முதற்கும்பேரு
கம்பியுப்புவெடியென்று யிதற்கும்பேரு
மொழிந்ததொருயடியென்று மிதற்கும்பேரு
முத்தமனேயிதின்பெருமை யுரைக்கிறேனே. 180

உரைக்கவேகம்பியுப்பு பலமோபத்து
உத்தமனேவயச்சட்டிக் குள்ளேவைத்து
நிறைக்கவே § சுணங்கனுட வெண்மலமும்மூன்று
நேராகதுரிசியது பலமுமொன்று
சிறக்கவே ⁝ சீனமொன்று $ காறந்தானுந்
திறம்போலவெண்கார மிவைரெண்டுந்தான்
அறைக்கவேவகையொன்று பலமரைந்தான்கூட்டி
யப்பனேகல்வமதிற் பொடியாய்பண்ணே. 181

பண்ணவேவயச்சட்டி யடுப்பில்வைத்து
பாங்குபெறவுப்பதனை யதின்மேற்கொட்டி
கண்ணவேயடுப்பேற்றி யுப்புருகமட்டுங்
கசிந்துமேயுருகையிலே செப்பக்கேளும்

---

* குடவன் - பித்தளை. § சுணங்கன் - நாய்.
⁝ சீனம் - படிகாரம். $ காறம் - முப்புச்சுண்ணம்.

முன்னமேபொடித்ததொரு தூளேயப்பா
முறைமுறையாய்த்தூவிவிடு புகையடங்கமட்டுஞ்
சொன்னதொருபொடியெல்லா மானபின்புந்
துப்புறவாய்தானெடுத்து வப்பால்வையே. 182

சாரம்

அப்பாலேவைத்ததொரு வுப்பைமைந்தா
வறைக்கவேகல்வமதி விட்டுக்கொண்டு
வெப்பானகாரமதை சொல்லக்கேளு
வெண்மையென்றகோழிமலங் கொண்டுவந்து
தப்பாதேயண்டத்தின் வெண்கருவைவிட்டு
தானரைப்பாயிருசாம மெழுகாய்ப்போகும்
முப்பானசாரமது * கங்கிபூட்ட
வுத்தமனே ¶ யுவரில்வைத்து புடத்தைப்போடே. 183

போடவேயைந்தெருவிற் புடத்தைப்போடு
பொங்காமல்வெடியாமன் னிற்கும்பாரு
நாடவேயெடுத்ததனை நிறுத்துக்கொண்டு
நாட்டுவாய்வெடிதனக்கு நாலத்தொண்ணு
தேடவேபோகாது விந்தநீரை
திறமைபெறசொல்லிவிட்டே னிந்தநூலில்
கூடவே § யெலியெலாம் பாலைவார்த்து
குமறவேதானரைத்துப் பீங்கானிலப்பே. 184

அப்பியேபனியில்வைக்க செயநீராகும்
அப்பனேபீங்கானி லெடுத்துக்கொண்டு
தப்பியேபோக்காது சரக்கெல்லாந்தான்
தட்டுண்டுகெட்டுமடா ஜெயநீராலே
ஒப்பியேபாஷாண மொன்பதுந்தான்
ஒடுங்குமடாயிதினுடைய வாடைகண்டா
லப்பியேயிதைவிட்டு இன்னமொன்று
வறுவகையின்மைந்தனே செயநீர்கேளே. 185

ஆறுவகை செயநீர்

கேளடாவெடியுப்பு பலமோபத்து
கிருபைபெறவேணுமென்று வயச்சட்டிவிட்டு

---

* அங்கி-கவசஞ்செய்து. ¶ யுவர்-கலர்மண்ணு. §எலியால்-காட்டாமணக்கு.

தேளடாகொட்டுதல்போல் சுண்ணமாக
செப்புகிறேன் $ சுதேசியுடகபாலம்வாங்கி
கோளடாவாராம விருந்துகொண்டு
கூட்டுவாய்பலமொன்று வின்னங்கேளு
நாளடா துருசோடு சீனக்காரம்
நலமானவெண்காரம் பூநீர்கூட்டே. 186

கூட்டியேநவாச்சாரம் வகையொன்றுக்கு
கூறுவேன்பலமொன்று பொடியாய்ச்செய்து
தாட்டியேமுன்பொடியோ டொக்கக்கூட்டி
யப்பனேவெடியுப்பு வுருகும்போது
வூட்டியேகொஞ்சமாம் தோண்டுக்கிண்டி
யுத்தமனேயுட்கொண்டு வாங்கும்பாரு
வாட்டியேபொடியெல்லாஞ் சென்றபின்பு
வழித்துமேகல்வமதி விட்டுக்கேளே. 187

கேளடாநவாச்சாரம் பச்சையாக
கெட்டியாய்பலன்மருந்து யெடுத்துக்கொண்டு
நாளடாவெடியுப்பு சுண்ணத்தோடே
நன்றாகசேர்த்தரைப்பா யெருக்கன்பாலால்
சூளடாயிருசாம மறைத்துக்கொண்டு
துப்புறவாய்பீங்கானி லப்பியேதான்
வாளடாபனியில்வைக்க செயநீராகும்
மைந்தனேகுப்பிதனி லடைத்திடாயே. 188

அடைத்துமேவடுகனுக்குப் பூசைபண்ணி
யாத்தாளைதியானித்து சொல்லக்கேளும்
படைத்துமேயவள்பதத்தி லர்ச்சித்தேதாம்
பாங்குபெறகுப்பியைநீ யப்பால்வாங்கி
சடைத்துமேபோகாதோ யென்தாய்ப்பூசை
சதாநித்தியவள்பதத்தை தொண்டுபண்ணு
நடத்துமேயவளுடைய கிருபைதானும்
நாதாக்கண்மறப்பையெல்லாம் நீக்குவாளே. 189

## தாளகச் சுண்ணம்

நீக்கவேமுன்னுரைத்த செயநீர்தன்னை
நீயெடுத்துசாக்குகளிற் றேய்த்துப்போடு

$ சுதேசிகபாலம் - குதமட்டை.

யாக்கவேகட்டுண்டு யிறுகிப்போகு
　மரகராவாகமதில் எல்லாஞ்சொல்வேன்
சேர்க்கவேதாளகத்தை செயநீர்தன்னில்
　திறமையாய்தான்துவைத்து ரவியிற்போடு
காற்கவேமூணுநா ளானபின்பு
　காக்கிணத்தினிலேயறைத்து கவசம்போடே. 190

## கெவுரிக் கட்டு

போடவேசுண்ணமது யென்னசொல்வேன்
　பொலிந்துமேநீறுமடா தாளகந்தான்
நாடவேதாளகச் சுண்ணந்தன்னை
　நலமாகத்தானெடுத்துச் சொல்லக்கேளும்
தேடவேகெவரியைத்தான் ஜெயநீராலே
　தீர்க்கமாய்தான்துவைந்து ரவியிற்போட்டுப்
பாடவேசாளகத்தின் சுண்ணத்தாலே
　பலமாகக்கவசமிட்டுப் புடத்தைப்போடே. 191

## இலிங்கக்கட்டுச் சிந்தூரம்

புடத்திலேகெவுரியுந்தான் கட்டிப்போகும்
　பொருமியேசுண்ணும்பா யிருக்கும்பாரு
திடத்திலேசுண்ணமதை யெடுத்துக்கொண்டு
　திறமையாலிங்கமதுக் கங்கிபூட்டி
* விடத்தலையின்வேரரைத்து யதின்மேல்காட்டி
　விருதுபெறற்கஞ்செருவிற் புடத்தைப்போடு
தடத்திலேயதைப்போற் பாகையுண்டோ
　தான்கட்டிப்போகுமடா லிங்கந்தானே. 192

தானென்றலிங்கமது கட்டிப்போகுந்
　தனையெடுத்துக்கல்வத்தி லிட்டுக்கொண்டு
மூனென்ற § நாதமுடன் ¶ வெடியுங்கூட்டி
　முசத்தியாந்தாளகமும் $ கெந்திகூட்டி
மானென்றதங்கமடா ரேக்குதானு
　மைந்தனேயொன்று பலங்காலாகத்

* விடத்தலை - விடத்தாறி.　§ நாதம் - அரசம்.
¶ வெடி - பொட்டிலுப்பு.　$ கெந்தி - கந்தம்

தேனென்றகட்டி யதோர் லிங்கமென்று
சேரவேகல்வத்தி லிட்டுக்கேளே. 193

கேளடாயாறுநீர்தன்னுலாட்டிக்
கெட்டியாய்த்துட்டதுபோல் வட்டுபண்ணி
வாளடாமூன்றெருவிற் புடத்தைப்போடு
மார்க்கமாய்க்கட்டியது நிற்கும்பாரு
சூளடாமறுபடியுங் கல்வத்திட்டுத்
துடியானகந்தகத்தை யதிற்குட்பாதி
கேளடாவாராமற் கூட்டிக்கொண்டு
கொடுமைபெறப் 1 பழச்சாற்று லாட்டித்திரே. 194

தீரவேரவிதனிற் காயப்போடு
திறமையாய்ப்பொடிபண்ணிக் 2 குப்பிக்கேற்றி
வாறவே 3 வாலுகையில் 4 தாளிவைத்து
மணலிட்டுக்குப்பியதி னுள்ளேவைத்து
ஆறவேபனிரண்டு சாமந்தானும்
அப்பனேமுன்போற் றெறித்தப்பின்பு
சேறவேமூன்றுநாட் குப்பிவாங்கித்
தேவியைநீபூசித் துடைத்துப்பாரே. 195

பார்க்கவேசிந்தூர மென்னசொல்வேன்
பவளம்போலிருக்குமடா 5 தளத்தலேதான்
ஏற்கவேபணவிடைதான் தேனிற்கொள்ள
என்னசொல்வேன்காயமது யிறுகிப்போகுங்
கார்க்கவேவாசிதா னடக்கும்பாரு
கண்கொள்ளச்சோதியது வேகமெத்த
சேர்க்கவேகுதிரையைத்தான் பூட்டிக்கொண்டு
திசைகளெட்டுவெல்லுமிது திறமிதாமே. 196

திரமானசிந்தூரம் வெள்ளிநூற்றிற்
செறுத்திவிடுவிராகனிடை யொன்றுவீத
முரமானமாற்றதுவு மெட்டுபாகு
மோகோகோணவி தன்பெருமை யுரைக்கப்போகுஞ்

---

1 பழச்சாறு - எலுமிச்சங்கனி ரசம். 2 குப்பி - புட்டி.
3 வாலுகை - அடுப்பு. 4 தாளி - மிடா.
5 தளம் - அடியில்.

சிரமான * வாகாச கம்பியாலே
செயிக்குமடாநவலோக மெல்லாந்தங்கம்
பரமானபராபரத்தின் வித்துவாகும்
பார்தனிலேவிள்ளாதே யெவர்க்குந்தானே. 197

ஆர்க்குமேசொல்லாதே செயநீர்போக்கை
யரனெனக்குச்சத்தியமாய்ச் சொன்னவித்தை
சேர்க்கையாய்ச்சித்தரெல்லாங் கூடிக்கொண்டு
சிரமாகவருவகைநீர் தன்னையப்பா
பார்க்கவேயவரவர்கள் மறைத்துச்சொன்னூர்
பாவம்வருமென்றுசொல்லி மனதிலெண்ணி
கார்க்கவேவேணுமென்று கிருபையாகிக்
கட்டினேன்சாஸ்திரத்தைக் கருதிப்பாரே. 198

கருதியேசித்தரெல்லாங் கூட்டிக்கொண்டு
காட்டினூர்சாஸ்திரங்க ளனேகங்கோடி
உறுதியாய்வாசமது செய்யச்சொல்லி
யொளித்தார்கள்கருக்கவெல்லா மொளித்துவைத்தார்
ஃ பருதி § மதியுப்புதனை மனதுக்கேற்ற
படிசொல்லிவைத்ததினுல் விபரமில்லை
அறுதியாய்ச்சொல்லிவைத்தார் பச்சையாக
அப்பனேயிதையறிந்து வாதம்பாரே. 199

வாதமென்னகொஞ்சத்திற் கிட்டுமோசொல்
மகத்தானபெரியோர்க்குத் தொண்டுபண்ணி
நாதமென்னநாகத்தின் விபரந்தன்னை
நாதாக்கண்பதமறிந்து விபரங்கேளும்
வேதமென்னவந்தரத்தின் பொருளுந்தோணும்
வேதாந்தசாஸ்திரத்தி னறிவுகாணும்
பாதமன்னவுப்பதனை யறியவேணும்
பரத்தினுடநிட்டையிலே பணிந்துநில்லே. 200

நில்லென்றுயானுரைத்த சாஸ்திரத்தில்
நினைவாகமனதில்வைத்துக் குருவென்றெண்ணி
சொல்லென்றுதியானித்து பூசைசெய்யச்
சோதித்துவுன்மனதிற் சொல்லும்பாரு

---

* ஆகாசகம்பி - கம்பியுப்பு. ஃ பருதி - சூரியன். § மதி - சந்திரன்.

கல்லென்றுகரடுமுத வுருகிப்போகுங்
　கருத்தில்வைத்துயென்னூலைப் பார்த்தபேர்க்குங்
கொல்லென்றுகூற்றுவனு மொதுங்கிப்போவான்
　கொடியதொருசமாதியிலே யிருந்துபாரே. 201

## பூநாகச் சத்து

இருந்துமேபூநாகச் சத்தைக்கேளு
　மென்னசொல்வேன்செம்மணலிற் 1 பூநாகந்தான்
பருத்துமேபெரிதாக விருக்கும்பாரு
　பட்டவிடம் 2 மதியைப்போற் சோதிகாணும்
நருத்துமேயைந்துபல மெடுத்துக்கொண்டு
　நேராவின்பால்தனிலே போட்டாயானல்
வெறுத்துமேமண்ணையெல்லாங் கக்கிப்போடும்
　வேற்படவேபூநாகம் பிழிந்துவாங்கே. 202

வாங்கியேகோவையிலைச் சாற்றிலூட்டி
　மைந்தனே 3 ரவிமுகத்திற் காயப்போடு
நீங்கியேகருப்பாக விருக்கும்பாரு
　நினைவாகக்காய்ந்தபின் யெடுத்துக்கொண்டு
தாங்கியேகல்வமதி விட்டுநீயுஞ்
　சார்வான 4 சூடனது லங்காற்போடு
ஓங்கியேமண்செய்துப் புடத்தைப்போடு
　உத்தமனேயிருபத்திற் புடத்திற்காணே. 203

காணவேபுடமாரி யெடுத்துப்பார்க்க
　கருப்பென்றநிறம்போகும் வெண்மையாகுந்
தோணவேபற்பத்தை யெடுத்துக்கொண்டு
　சொல்லுவேன்சரக்குவகை யின்னங்கேளும்
வேணவேவெண்காரம்பல மரைதான்போட்டு
　விருதுபோற்முனரைப்பாய் காடிவார்த்து
ஊணவேவில்லையாய்த்தான் பிடித்துக்கொண்டு
　உத்தமனேபத்தெருவிற் புடத்தைப்போடே. 204

போடவேபற்பந்தா னெடுத்துக்கொண்டு
　புகழ்பெறவேகாடிதனி லூரவைத்து

---

1 பூநாகம் - நாக்குப்பூச்சி. 2 மதி - செம்பு, அதேசந்திரன்.
3 இரவி - சூரியன். 4 சூடன் - கற்பூரம்.

நாடவேநாலாநாட் டெளிவிறுத்து
நாட்டுவாய் 1 சூதமது 2 களஞ்சியாது
ஓடவேவிட்டுநீ கையாற்றேய்த்து
உத்தமனேரசமதுதான் செம்பிற்ருக்கு
கூடவேரசமெல்லா மொன்ருய்த்தேய்த்துங்
கூட்டியேகெட்டியா யுண்டைசெய்யே. 205

செய்தஉண்டை 3 குகையில்வைத்துக் 4 காரங்கூட்டிக்
தீர்க்கமாயுருக்கிப்பார் செப்புமாகுந்
கொய்தசெம்பைத்தானெடுத் துருக்கிப்பாரு
கோடிரவிபோலிருக்குஞ் சத்துவேகந்
தொய்தமென்றபூநாகச் செம்பையையா
சுருக்கமாய்ச்சொல்லுகிறேன் வேதைமார்க்கம்
வெய்தமென்றகுளிகைக்குக் கொடுத்தாயானுல்
வேகமதாயதிவேகம் பசியுண்டாமே. 206

உண்டானசெம்பிடைக்குத் தங்கங்கூட்டி
யுத்தமனேகுகைதனி லுருக்கும்போது
பண்டானநாகமடா நாலத்தொன்று
பருங்கண்ணேதானெடுங்கிக் கூட்டியீவாய்
குண்டானகலகமதி லுருக்கிச்சாய்ப்பாய்
கொட்டவேதூளாக நொருங்கும்பாரு
பண்டானதாளகமுங் கெவுரிகூட்டி
பண்பாககல்வமதி லரைத்திடாயே. 207

அரைக்கவேசெவ்வல்லி பூச்சார்விட்டு
அப்பனேநாற்சாம மரைத்தபின்பு
யுரைக்கவேரவிதனிற் காயப்போடு
உத்தமனேபொடிபண்ணிக் 5 குப்பிக்கேற்றித்
திரைக்கவேவாலுகையின் மேலேவைத்து
தீயெரிப்பாய்பனிரண்டு சாமந்தானு
மறைக்கவேவில்லையடா சிந்தூரத்தை
மைந்தனேராக்கால மாறப்போடே 208

போடவேநாலாநாள் குப்பிவாங்கிப்
பூரணியைப்பூசித்து தியானஞ்செய்து

---

1 சூதம் - இரசம். 2 களஞ்சு - நாற்பது குன்றிடை.
3 குகை - மூசை. 4 காரம் - செயநீர். 5 குப்பி - புட்டி.

ஆடவேவேணுமென்றால் சொல்லக்கேளு
அப்பனேகுப்பித்தா னுடைத்துப்பாரு
நாடவேசெம்முருக்கம் பூப்போலாரும்
நலமானசிந்தூரங் குன்றியுண்ணு
தேடவேயனுபானந் தேனிலூட்டுச்
சிவசிவாயுன்தேக மருணனுமே. 209

அருணனென்றசிந்தூரம் வெள்ளிநூற்றில்
அளித்திடவேமாற்றென்ன பணிரண்டாகுந்
தருணமென்றவென்தாயைப் பூசைபண்ணச்
சகலகலைசித்தெல்லாஞ் சொல்வாள்தாயார்
கருணமென்றபஞ்சீகரண பூதத்தாலோ
காட்டுவாளண்டபகி ரண்டமெல்லா
மருணமென்றநாலைவிட்ட தோஷத்தாலே
வந்ததடாபிரபஞ்ச மாயைதானே. 210

தானென்றபூநாகச் சிந்தூரத்தைச்
சாற்றினேன்சித்தருட சபையில்நின்று
கோனென்றசித்தரெல்லாங் கூட்டிக்கொண்டு
கொழுப்படாபாடினது வென்றுகேட்டார்
தேனென்றதக்ஷணத்திற் பொதிகைநாதன்
சின்மயத்தினுத்தரவாற் றெளிந்துசொன்னேன்
மானென்றவென்குருவும் புசண்டர்சொல்ல
வசனித்தேனன்னூற்றில் மகிழ்ந்துகாணே. 211

## இந்திரகோபச் செப்பு

காண்பதென்னன்னூற்றி லின்னங்கேளு
கனமானவிந்திரமாங் கோபச்செம்பை
ஆண்பதென்னபொருளென்று மெண்ணிடாதே
யாத்தாளுமப்பனுமே யணைந்தநாதம்
துண்பதென்னமின்னலுக்குள் * சோமனாலே
துப்பரவாய்ரவிபோலே காந்தியாச்சு
பாண்பதென்னபூமியிலே மெத்தவுண்டு
பார்த்துநீகொண்டுவந்து சொல்லக்கேளே. 212

கேளடாமயிமதுதா னிருபத்தஞ்சு
கிருபைபெறக்கல்வத்தி லிட்டுக்கொண்டு

* சோமன் - சந்திரன், அதேசெம்பு.

நாளடா துரிசியது பலந்தானுது
நலமானவெண்காரம் பலந்தான்மூன்று
வாளடா 1 வெடியுப்பு பலமோரண்டு
வளமானவீரமது பலமுமொன்று
சூளடா 2 குடோரியது பலமும்ரண்டு
சொல்லுவேனிவையெல்லாங் கல்வத்திட்டே. 213

இட்டுமேபூநாகம் பலந்தானொன்று
இவையெல்லாம்விட்டரைக்க வகையைக்கேளு
கட்டுமேயவுரியிலைச் சாற்றுற்சாமங்
கருங்கோழிரத்தமது மூன்றுசாமம்
மொட்டுமே 3 யாடுதின்னுப் பாளைச்சாறு
முத்தமனேமுச்சாம மரைத்துக்கொண்டு
வெட்டுமேவெள்ளாட்டு ரத்தமோடு
விழுதுபடத்தானரைப்பாய் சாமம்நாலே 214

நாளானவாடுதின்னுப் பாளைச்சாறும்
நாற்சாமந்தானரைத்துச் சொல்லக்கேளு
பாலானசாறுவகை யரைக்கும்போது
பற்றவேகாய்ந்தபின்பு மறுச்சார்வாரு
சேலான 4 வெலியாலம் பாலைவிட்டுத்
திரள்வரைமுச்சாமந் தீர்க்கமாக
காலானகாசதுபோல் வில்லைபண்ணிக்
கனத்ததொரு 5 குகைதனி லமுத்திடாயே. 215

அமத்தியே 6 சரவுலையில் வைத்துக்கொண்டு
அப்பனேதுரித்தியிட்டுச் சொல்லக்கேளு
சமத்தியென்றவென்தாயைப் பூசைசெய்து
சாதகமாய்வயக்கிண்ணீற் றுரித்திரண்டு
செமத்தியேகரியைநன்றாய்ச் செமத்தியூது
திரளவேகரிமணியா யிறங்கும்பாரு
கமுத்தியேமேலோடு கொண்டுமூடு
கட்டாகவஞ்சு திர மூதிடாயே. 216

---

1 வெடியுப்பு - பொட்டிலுப்பு. 2 குடோரி - மாத்திரை.
3 ஆடுதின்னுப்பாளை - ஆடுதொடா மூலி. 4 எலியால் - கட்டாமணக்கு.
5 குகை - மூசை. 6 சரவுலை - சரம்வைத்தூதுதல்.

ஊதியேமணிகளெல்லாம் பொருக்கிக்கொண்டு
வுத்தமனே 1 சறக்கெல்லா மழுந்தவூது
வாத்திலேசத்தெல்லா மொன்றாய்ச்சேர்த்து
வப்பனே 2 காரமிட் டுருக்கிப்பாரு
ஏற்கவேசெம்பையினி யென்னசொல்வேன்
யினிவானசூரியன்போற் காந்தியாகும்
பாகமாய்மதிதரித்த யீசன்செம்பை
பார்ப்பதற்குக்கண் ணுண்டோ பாருள்ளோர்க்கே. 217

பார்தனிலிச்செம்பைக் கண்டபோதே
பரனுனதுவசமாவார் பாருபாரு
கார்காலந்தனிற்றழைத்த விருட்சம்போலக்
காணுமடாயெத்தொழிலுங் கண்கொள்ளாது
சீர்தனிலிச்செம்பை வெள்ளிநூற்றிற்
செலுத்திநீயொன் றிடவே மாற்றென்னசொல்வேன்
சோதனைக்குமாற்றென்ன விருபத்தஞ்சு
சிரமைமெத்தத்திரமைமெத்த யின்னங்கேளே. 218

கேளடாயிச்செம்பை மதவானைக்கிய
கீர்த்திபெறக்கொடுத்துவி டென்னசொல்வேன்
வாளடாசோடசமாங் கலையுண்டாச்சு
மைந்தனேகொடுமையென்றாற் கொடியவேகம்
சூளடாயண்டத்திற் செல்லும்போது
சோதியடாரவிகோடி காந்தியாகுந்
தாளடாயிச்செம்பை வைத்துக்கொண்டு
தான்செய்யும்வகைசொல்வே னின்னங்கேளே. 219

இன்னமுநான்சொல்லுகிறேன் செம்பிற்போக்கை
யிலக்காகச்சொல்லிவைத்தார் சித்தரெல்லாம்
முன்னமுநான்சொன்னதொரு தொழிற்களெல்லா
முப்பூவின்கருவதற் கொவ்வாதப்பா
கன்னமுள்ளசரக்குகளைக் காட்டிக்கொள்ளும்
கண்டவுடன்பாஷாணஞ் செத்துப்போகும்
வன்னமுள்ளட்டசித்து வசியமுண்டாம்
மைந்தனேயிதின்பெருமை வாழ்த்துவேனே. 220

1 சறகு - அழுக்கு. 2 காரம் - செயநீர்.

வாழ்த்துவேனிச்செம்பை 1 குகையிலிட்டு
மைந்தனேயுருகையிலே பலமதொன்று
அழுத்தமுள்ளதங்கமடா பலந்தானென்று
அப்பனேநாதமென்று கொடுத்தாயானால்
பழுத்தவொருமூன்றின முருக்கேகொண்டு
பாங்குபெறகல்வமதி லாட்டும்போது
கொழுத்ததொருகளங்கமது யொருங்கும்பாரு
கூறுவோமிதன்பெருமை கூறுவோமே. 221

கூறுவோஞ்சரக்குவகை யின்னங்கேளு
கொடியதொருதாளகமுஞ் 2 சிலையுங்கெந்தி
தாறவேகெவுரியோடப் பிரேகத் 3 துத்த
மப்பனே 4 வெடியுடனே சூதங்கூட்டி
நீறதே 5 குலாமலிச் சாறுதன்னால்
நிகழவேநாற்சாம மரைத்தபின்பு
ஆறவேமாந்துளிரின் சாற்றினாலே
அன்பாகவரைத்திடுவாய் சாமம்நாலே. 222

நாலானசாமமடா வரைத்தபின்பு
நலமாகக்காய்ந்தபின் சொல்லக்கேளு
சேலானதொன்றுமில்லை செம்பருத்தம்பூச்சாற்
சிறக்கவேநாற்சாம மரைத்துக்கொண்டு
மேலானரவிதனி லுலறப்போட்டு
மேன்மையாய்பொடிபண்ணிக் குப்பிக்கேற்றி
சூலானசூன்மிகுந்து கற்பமாச்சு
சொல்லுவேனிதன்பெருமை சொல்லுவேனே. 223

சொல்லுவேன்வாலுகையின் மேலேவைத்து
துப்புரவேமுன்போற் பாகஞ்செய்து
வெல்லுவேன் 6 முத்தீயின் விபரங்கேளு
வேதாந்ததீபமடா விளக்கும்நாலு
சொல்லுவேன்கமலம்போற் றீபந்தானுந்
திறமைபெறநாற்சாமந் தீர்ந்தபின்பு

---

1 குகை - மூசை.
2 சிலை - மனோசிலை.
3 துத்தம் - பாற்துத்தம்.
4 வெடி - வெடியுப்பு.
5 குலா மல்லி - முட்செவ்வந்தி.
6 முத்தீ - கமலாக்கினி, காடாக்கினி, தீபாக்கினி.

அல்லுவேணுனுரைக்கிறேன் மூன்றுநாளில்
அப்பனேநாற்சாமம் கோரமாமே. 224

அகோரமென்றவக்கினிதா னுலுசாட
மப்பனேயெரித்தபின்பு சொல்லக்கேளு
வகாரமென்றசொல்லிதுக் குட்சொல்லபோமோ
மைந்தனேயிராக்கால மாரப்போட்டு
சிகாரமென்றவென்தாயார் பார்வதிபாதஞ்
சிறக்கவேபூசைபண்ணித் திறத்தைக்கேளும்
நகாரமென்றபட்டணத்திற்குடியிருந்த
நாதாந்தசத்திக்கு வாமம்வையே. 225

வாமம்வைத்துப்பூசைபண்ணிச் சொல்லக்கேளு
மார்க்கமாய்வைரவர்க்குப் பூசைசெய்து
ஓமம்வைத்துயென்குருவை யர்ச்சனைசெய்து
வுத்தமனேயென்னைநீ நினைந்துகொண்டு
காமம்வைத்தபேய்போல வலைந்திடாதே
கவடுவைத்தால்வைரவனுஞ் சாபமீவார்
சோமம்வைத்தகுருநாதன் பூசைபண்ணி
சொல்லுவேன்குப்பியைநீ யப்பால்வாங்கே. 226

வாங்கியேகுப்பியைநீ யுடைத்துப்பாரு
மைந்தனேசிந்தூர மென்னசொல்வேன்
தாங்கியேயெறித்துநீ சிமிளில்வைத்து
தாட்பாதத்திற்பூசைபண்ணிக் * குன்றியுண்ணு
தூங்கியே திரியாதே காயச்சித்தி
சொல்லுவேன் $ மண்டலத்திற் சித்தியாகு
மோங்கியேநரைகளெல்லா வண்டுபோலா
மோகோகோசோதிநிற மாகும்பாரே. 227

## இவ்வடி ஆச்சரியக்கோள்.

சோதியென்றசிந்தூர வெள்ளிதன்னிற்
சொல்லுவேனுயிரத்தி லொன்றுபோடு
மாதியென்றமாற்றதுதா னிருபதாகு
மப்பனேபச்சைவன்னங் கண்ணேகூசும்

* குன்றி - குண்டுமணி
$ மண்டலம் - நாற்பதுநாள்.

வாதிகளேசிந்தூரஞ் செய்வீராகின்
மகத்தானசிவலோக மெல்லாந்தங்கம்
நீதியாய்ச்சொல்லிவைத்தேன் சிந்தூரத்தை
நிலைத்ததொருசித்தரெல்லா மொளித்தார்பாரே. 228

ஒளித்தாரேசித்தரெல்லாம் பேசிக்கொண்டு
ஒகோகோயிந்திரமாங் கோபச்செம்பை
யொளித்தாரேகருக்கெல்லாம் வெளிவிடாம
லொருகழியாவெட்டிங்கே புதைத்தார்பாரு
களித்தானேயொருவருக்குந் தோணுதென்று
கபடமாயவர்மனங் கருதிக்கொண்டார்
வளித்தானேமையறனும் வகையறிந்தும்
வழிகண்டுபார்ப்பதாற் றோணுந்தோணே. 229

தோணுதுவென்றுசொல்லி விட்டிடாதே
சொற்பெரியர்நாதாக்க ளாட்டமெல்லாங்
காணுதுகாணுமடா வுற்றுப்பார்த்தால்
கருவுதனைக்குருசொல்லக் காணவேணுங்
கோணுதுவென்னுடைய நூலைப்பார்த்தால்
கூருவேன்கருமறைப்பு மொன்றுமில்லை
போணுதுபிரபஞ்சந் தன்னைப்பாரார்
பேரின்பமுத்தியிலே சேர்க்கும்பாரே. 230

சேர்க்கவேசொல்லுகிறே னின்னங்கேளு
திறமாகச்சத்திவகை ஜெயநீர்தன்னில்
பார்க்கவெடியுப்பு நாலாங்காச்சல்
பரிவாகப்பல 1 மீரெட்டெடுத்துக்கொண்டு
ஆர்க்கவே 2 அயச்சட்டிதன்னிலிட்டு
அப்பனேசரவுலையில் வைத்துவூது
கார்க்கவேவுசிகொண் டுருகும்போது
3 கதிரவனுள் 4 சுணங்கனுட 5 கபாலம்வாங்கே. 231

வாங்கியேயுவர்மண்ணிற் சிறுநீர்விட்டு
மைந்தனேகலக்கியதைத் தெளியவாங்கி

---

1 மீரெட்டு - பதினாறு. 2 அயச்சட்டி - இருப்புபாண்டம்.
3 கதிரவனுள் - ஆதிவாரம். 4 சுணங்கன் - நாய்.
5 கபாலம் - மண்டை.

ஓங்கியேவண்டவோ டதனைநீயு
　மொருஜாமமூறவைத் துரைக்கக்கேளு
தாங்கியேதிரியாதே கபாலவோட்டைத்
　தயவாகயெண்ணெய்கக்கி வெளுத்திருக்குந்
தூங்கியேதிரியாதே கபாலவோட்டைத்
　திறமாகத்தான்கழுவி யுலரப்போடே. 232

போடவேரவிதனிலே காய்ந்தபின்பு
　புகழுவேன்மாவாக்கி யெடுத்துக்கொண்டு
தேடவேவேண்டாங்காண் பலந்தான்மூன்று
　திறமானபூரமுட னன்னசேதி
நாடவேவளையலுப்பு யிந்துப்போடு
　நலமானகரும்பூரஞ் சாரஞ்சேரு
வாடவேவகையொன்று பலமொன்றாக
　வப்பனே 1 சீனமென்று 2 காரமிரண்டே. 233

ரெண்டானயிவையெல்லாம் பொடியாய்ப்பண்ணி
　நேர்ப்பானகபாலமதிற் சேர்த்துக்கொண்டு
தண்டானவெடியுப் புருகும்போது
　தாக்கடாவதனையுஞ் சுண்ணமாச்சு
குண்டானவிவையெல்லாங் கொண்டபோது
　கூறுவேன்வழித்துயினி கல்வத்திட்டு
பண்டானவீரமது பலந்தானைந்து
　பருவமாய்க்கூடவிட் டாட்டிடுவாயே. 234

ஆட்டுவாயெலுமிச்சம் பழச்சார்தன்னா
　லப்பனேயிருசாம மரைத்தபின்பு
கூட்டுவாய்மாதளையின் பழச்சாற்றாலுங்
　கொடியபுளிப்பாயிருக்கு மதினாற்சாமம்
நீட்டுவாய் 3 மயனம்போ லானபின்பு
　நேர்ப்பாகவில்லைதட்டி யுலரப்போடு
சூட்டுவாய்ரவிதனிற் காய்ந்தபின்பு
　திப்புரவாய்ப்பூநீற்றை புடத்திற்போடே. 235

புடத்தையினிப்போடுகிற விபரங்கேளு
　பூநீரையகலில்விரற் சனமேபோடு

1 சீனம் - படிகாரம். 2 காரம் - வெண்காரம்.
3 மயனம்போல் - மெழுகுபோல்.

தடத்தையினிச்சொல்வேன் மங்கணீங்கட்
டானிடுவாய்வில்லேதனைப் பூநீர்தன்மேல்
படைத்ததொருபூநீற்றை யதன்மேல்கொட்டி
பாங்காகவேயமுத்தி யோடுமூடி
சடைத்துநீபோகாதே யொருதாளைந்திற்
ருளிடுவாய்ரவிபுட மாகும்பாரே. 236

ஆகுமடாபுடமாறி யெடுத்துக்கொண்டு
அப்பனேசாரமது பலந்தானஞ்சு
போகுமடாதிருகுகள்ளிப் பாலேவார்த்து
பொங்காமல்தானரைத்து பீங்கானிலப்பி
வேகுமடாபனியில்வைக்க ஜெயநீர்தானு
மென்சொல்வேன்வாருதிபோ லாகும்பாரு
தாகுமடாசெயநீரைப் பீங்கானுள்ளே
தானடைத்துதேவிமுன் வைத்திடாயே. 237

வைத்துமேபூசைசெய்து வப்பாகேளு
வாகானசரக்குகளை தேய்த்துப்போட்டால்
நைத்துமேசுத்தியது யென்னசொல்வேன்
நலமானசரக்குசுத்தி திறமாம்பாரு
எத்துமுதற்செம்புவரை காசிற்றேய்க்க
விதமாககளிப்பற்று சுத்தியாகுஞ்
சேர்த்துமேசரக்குகளை கட்டுங்கட்டுந்
தீர்க்கமடாசொர்னநிறங் கொடுக்கும்பாரே. 238

பாரேநீ * கோழியண்டந் தன்னிலேதான்
பராபரியாடைலமது சொல்லக்கேளு
சேரேநீவீரமுடன் பூரங்காரந்
திறமானசினமுடன் கௌரிச்சாரந்
தேரேநீலிங்கமுடன் வெடியுங்கந்தி
தீர்க்கமாந்தாளகமும் நாகஞ்சூதம்
வேறேநீயெண்ணாதே வகையொன்றுக்கு
மீருதேபலமொன்று விதஞ்சேரே. 239

விதமென்னவகையெல்லாங் கல்வத்திட்டு
வெண்மையென்றகோழியுட னண்டம்வாங்கி

---

* கோழியினண்டம் - கோழிமுட்டை.

நீதமென்றயண்டமது யைம்பத்தொன்று
நிரமைநிறமஞ்சளென்ற நிறமாந்தன்னை
நாதமென்றமஞ்சணிறக் கருவினாலே
நயம்படவேசாமம்நா லறைத்தபின்பு
சூதமென்றநெல்லுபோல் வில்லைதட்டி
துப்புறவாய்க்கலசமதி லடைத்திடாயே. 240

அடைத்துமே $ பூப்புடத்திற் றைலம்வாங்கி
யப்பனே ¶ வாலைதனைத் தியானஞ்செய்து
படைத்துமே § வஸ்துவொடு சுத்திசெய்து
பாலமுதுவடைபருப்பு பரமானங்க
ளுடைத்துமேதென்னங்காய் மற்றவர்க்க
முத்தளமால்புஷ்பத்தை நிறையச்சாத்தி
மடைத்தனமாய்த்திரியாதே தியானஞ்செய்து
வந்திறங்குந்தயிலத்தை யின்னங்கேளே. 241

கேளடாதயிலமது பீங்கானுள்ளே
கெட்டியாய்த்தானிறங்கு மென்னசொல்வேன்
கேளடாவாராம லப்பால்வாங்கிக்
கொடியதொருவீரமது பலமேலாட்டு
நாளடாகொடிரவியில் வைத்துநீயும்
நாள்மூன்றுங்கடந்தபின் பெடுத்துக்கொண்டு
சூளடாவயிரவனைத் தியானஞ்செய்து
சொல்லுவேன்மதிதனிலே தடவிப்போடே. 242

போடவேமாற்றென்ன பத்தரையுமாகும்
போக்கோடேயிரும்புமுதற் பழுக்கும்பாரு
தேடவேபணமிடைதான் பனவெல்லத்திற்
றின்னுவிடுகாயசித்தி யென்னசொல்வேன்
நாடவேமண்டலத்தி னரையுமாறும்
நாதாக்கண்மலைதோறும் வைத்தார்பாரு
ஓடவேகெவுனமது சென்றுயானு
ஆறிவருந்தயிலமதைக் காணலாமே. 243

காணலாஞ்சித்தருட மறைப்பையெல்லாங்
கடிசானகெவுனமாங் குளிகையாலே

---

$ பூப்புடம் - குழிப்புடம். ¶ வாலை - திராவகமிரங்குங் கரகம்.
§ வஸ்து - மதுபானம்.

தோணலாமந்திடத்தில் செல்லும்போது
　தொண்டுபண்ணுநீயவரைக் காக்கவேணும்
மூணலாமுன்மனதை யந்திடத்தி
　லுறுதிவைத்துதவத்தினி லிருந்தாயானாற்
பூணலாஞ்சித்தர்வந்து தொந்தமாகிப்
　போக்கோடேயுதகமதை யீவார்பாரே. 244

ஈயவேவாங்கிவந்து காயசித்தி
　யிதமானபோக்குணக்குஞ் சொல்லுவார்கட்
டோயவேசித்தராற் சொல்லவேணும்
　தொண்டுபண்ணிநின்றவரை வணங்கவேணும்
மாயவேவேண்டாம்நீ யென்றுசொல்லி
　மைந்தனேயைந்நூற்றில் வாறுசொன்னேன்
சாயவேதயிலமொன்று விதற்குப்பேரு
　தப்பாதுதகமென்றுஞ் சாற்றலாமே. 245

## இலிங்கக்கட்டு மெழுகு

சாற்றவேதயிலமதை யெடுத்துக்கொண்டு
　தப்பாமலிங்கத்துக் கங்கிபூட்டி
ஆற்றவேகறியோட்டில் வாட்டுவாட்டு
　அப்பனேமெழுகாகுங் கட்டிப்போகும்
வாத்தவேவெள்ளிசெம்பி லீந்தாயானன்
　மாற்றென்னபத்தரை மாற்றுகாணுந்
தாத்தவேசரக்குகளிற் றேய்த்துப்போடு
　சாருண்டுவதுமெழுகாக் கட்டுந்தாதே. 246

## தாளக்கட்டுத் தைலம்

கட்டவேசொல்லுகிறே னின்னங்கேளு
　கருவானதாளகத்தின் தயிலந்தன்னை
கொட்டவேமுன்சரக்கும் பலமும்பத்து
　குமரவேசுத்திசெய்து சொல்லக்கேளு
ஆட்டவேகெவுரியுடன் வீரம்பூர
　மப்பனேரசமுடனே வெடியுமொன்று
ஒட்டவேபன்றியுட கொழுப்பைவாங்கி
　யுறுதிபெறத்தானறைப்பா யொன்றாய்த்தானே. 247

ஒன்றானபலமொன்று வகையதொன்று
ஒக்கவேகல்வமதிற் கூடப்போட்டு
பன்றியின்கொழுப்பதனு லாட்டிக்கொண்டு
பக்குவமாய்ச்சாமமது நாலுந்தானும்
வென்றானவில்லையது சிறுசாய்த்தட்டி
விதமாகரவிதனிலே சாமம்வைத்து
குன்றானகலசமதில் வில்லைவைத்துக்
கூறுவேன்தன்மேலே பூநீற்போடே. 248

போட்டுமேகலசமாய் சீலைசெய்து
புகழ்பெறவேதார்தனிலே மலர்தான்போடு
ஊட்டுமேவஞ்சுதமர் சவுக்கமாக
வுத்தமனேதாளிட்டு சலாக்கைவைத்து
நீட்டுமேகுழிதனையு மிருசாண்மட்டும்
நினைவாகத்தான்கிண்டி சேறுசெய்து
மூட்டுமேயதினுள்ளே பீங்கான்வைத்து
முன்புளியின்வாய்தனிலே கலசம்வையே. 249

வையப்பாபீங்கானில் வாயில்நின்று
வட்டமாய்மண்ணதனுல் மூடிபோலே
மெய்யப்பாசொல்லிவைத்தே னின்னங்கேளு
வெண்மையாய்நாகசரங் கட்டைபோலே
பொய்யப்பாசொல்லவில்லை குழாய்போற்செய்து
பூட்டடாதமர்துகளை வாய்க்குந்தன்னிற்
செய்யப்பாசீலைமண் வலுவாய்ச்செய்து
தீர்க்கமாயேழுமண்ணுந் திரமாய்ச்செய்யே. 250

திரமாகச்செய்தபின்பு கலசந்தன்னைத்
தீர்க்கமாய்த்தாறுமட்டு மட்டமாக்கி
உரமாகமணற்பரப்பி யதின்மேல்கேளு
வுலைபொருந்தவாய்வளைய மோட்டைவைத்து
தரமாகயதைச்சுற்றிக் கவிழ்த்தாய்போலே
தார்கலையவதைமூடிக் கரியைக்கொட்டி
உரமாகக்கரிமேலே விராட்டியிட்டு
வுத்தமனேதீயிட்டுத் தியானஞ்செய்யே. 25

செய்யவேவைரவர் தியானத்தோடு
　　தீர்க்கமாய்ச்சத்தியையும் பூசைசெய்து
வெய்யவேயிவர்களுட தியானத்தாலே
　　வெருண்டெழுந்தத்தைல மிறங்கும்பாரு
நையவேசரக்கெல்லாங் கரைந்துபொங்கி
　　நாகத்தின்வழியிறங்கித் தைலம்நிற்கும்
பொய்யென்றுபூசையைநீ மறந்தாயானல்
　　போக்கோடேதைலமது மிறங்காதெண்ணே. 252

எண்ணவேதைல மிறங்குமட்டு
　　மென்தாயார்பூசையைநீ மறந்திடாமற்
கண்ணவேவைரவர்கள் நெஞ்சில்வைத்து
　　கண்மூக்குமத்தியிலே கருத்தையூணி
பண்ணவே தியானத்தால் தைலந்தானும்
　　பார்க்கவேபீங்கானி லிறங்கிநிற்கும்
தண்ணவேதைலமதை யப்பால்வாங்கி
　　தானிடுவாய்வீரமதில் பலந்தானென்றே. 253

ஒன்றானவீரமதைப் பொடித்துவிட்டு
　　வுத்தமனேரவி தனிலே யொருநாள்வைத்து
குன்றானபீங்கானிற் பதனம்பண்ணிக்
　　கொட்டுவாய்ரேக்கதனைப் பலந்தானென்று
தன்றானசொர்னமென்ற ரேக்கையுந்தான்
　　தீர்க்கமாய்த்தோய்த்துவிடக் கலந்துபோகும்
பன்றானதைலமடா யென்னசொல்வேன்
　　பராபரியாள்நாதமென்று பேருமாச்சே. 254

பேரானதயிலமதைச் சித்தரெல்லாம்
　　பேசியேயொளித்தார்க ளெல்லாருந்தாம்
காரானகயிலாசச் சட்டைநாதர்
　　கட்டினார்தீக்ஷவிதி யிருநூற்றுக்குள்
நேரானபுசண்டருட கிருபையாலே
　　நேர்த்தியாயிதைத்தெளிந் தைந்நூற்சொன்னேன்
வாரானதைலத்தின் பெருமைதன்னை
　　வசனித்தேனின்னமுந்தான் வகையைக்கேளே. 255

கேளடாதைலமதை மண்டலந்தான்
கிருபைபெற்றுக்கொண்டிடவே காயசித்தி
கோளடாவாராது நரையும்போகுங்
கொடியதொருதிரைகளெல்லாம் வாங்கும்பாரு
பாளடாபோகாது நரம்பையெல்லாம்
பம்பரம்போலாக விறுக்கிக்கொள்ளும்
வாளடாநமனுக்கு நமனாய்நின்று
வாழ்ந்திடுவாய் *கற்பாந்த காலந்தானே. 256

தானென்றதைலமதை வெள்ளிற்செம்பிற்
றடவியேபுடம்போடப் புடத்திலேதான்
வானென்றமாற்றென்ன பத்துமாகு
மைந்தனேயிரும்புமுதற் பழுக்கும்பாரு
கோனென்றசரக்குகளு மெழுகுமாகுங்
கூறுவேன்கட்டினது மிதுவேயாகும்
ஊனென்றதைலங்கள் செய்யும்போது
ஒழுங்காகவிம்முறைகள் செய்துகொள்ளே. 257

கொள்ளவேவாதமுறை கருக்கிலெல்லாங்
கூறுவேனிருநூற் றைம்பதுக்குள்
அள்ளவேமுப்பூவின் மார்க்கஞ்சொன்னேன்
அனேகமாங்குறுக்குவழி பரிசினமுஞ்சொன்னேன்
மெள்ளவே ¶பூவெடுக்க விவரஞ்சொல்வேன்
வேதாந்தமனோன்மணியாம் பூசைசொன்னேன்
கள்ளமேவாராது இன்னங்கேளு
கருவானசரக்குவைப்பு காட்டுறேனே. 258

## துருசு வைப்பு

காட்டுவேன்வாதத்தி லாதியென்ன
கருவானதுருசுனுட வைப்புகேளுஞ்
சூட்டுவேன் §சீனமது பலந்தானலு
துப்புறவாம்வெடியுப்பு பலந்தானலு
கூட்டுவாய்கல்லுப்பு சேர்தானெட்டு
குமறவேபொடிபண்ணிச் சொல்லக்கேளும்
பூட்டுவேன்செம்பான பாண்டந்தன்னிற்
பொடித்திட்டுப்பழச்சாறுந் தயிரும்வாரே. 259

* கற்பகாலம் - கோடியுகம். ¶ பூ - முதற்குறைமுப்பு. § சீனம் - படிகாரம்.

வார்த்துமேபழச்சாறு படிதான் 1 ரண்டு
மைந்தனே 2 கரிமேதைத் தயிர்தானென்று
பார்த்துமேகலக்கிட்டுச் சீலமண்செய்து
பக்குவமாயரையளவு குழிதான்வெட்டி
கார்த்துமேயொட்டைலத்தி குதிரைலத்தி
கவியவேதான்மூடி மண்ணுங்கொட்டி
தூர்த்துமேன்மூடிவிட் டாறுதிங்கட்
டொச்சமறக்கலந்தபின்பு சொல்லக்கேளே. 260

சொல்லுவேன் துருசென்ற பேருமாச்சு
சொற்பெரியமூலரென்று பேருமாச்சு
வெல்லுவேன்வாதவித்தை தனக்கேயாதி
வேதாந்தசாரமென்று மிதற்கேபாரு
கொல்லுவேன்சூதத்தை யென்றுநின்ற
குடோரமுள்ளமதயானைக் கோவிக்கோவி
மில்லுவேன்சரக்குகளைத் தலைதூக்காமல்
மீரடங்கக்கட்டுகிற குருவுமாமே. 261

## வீரவைப்புத் திராவகம்

குருவானவீரத்தின் வைப்புக்கேளு
கூறுவேன்வெடியுப்பு சேர்தானஞ்சு
உருவானசீனமது சேர்தானாறு
வுத்தமனேயிதிற்பாதி பொடித்துப்போடு
கருவானதிவையெல்லாங் கல்வத்திட்டு
கடுகவரை 3 மேனியென்ற சாற்றினாலே
திருவானரவிதனிலே காயப்போட்டு
சீர்பெறவேபொடியாக்கிப் பாணைக்கேற்றே. 262

ஏற்றியே 4 வாலுகையின் மேலேவைத்து
என்னசொல்வேன்சக்கரமாம் 5 வாலைதன்னை
போற்றியேபாண்டத்திற் கவிழ்த்துநீயும்
புகழ்பெறவேசீலமண் வலுவாய்ச்செய்து

---

1 ரண்டு - வடமொழி. 2 கரிமேதை - கருப்பெருமை.
3 மேனி - குப்பைமேனி. 4 வாலுகை - அடுப்பு.
5 வாலை - திராவக மிரக்குகிற குழாயாயுள்ள பாண்டம்.

ஆற்றியேமண்ணாலே குழாவைப்பண்ணி
அப்பனேவாலையுட் மூக்கிற்சேர்த்து
வாத்தியேயென்தாயைப் பூசைபண்ணி
மைந்தனேயனலையிட்டுத் * தீநீர்வாங்கே. 263

வாங்கையிலேசுத்தவெள்ளி வருகும்பாரு
மார்க்கமாய்வீசிவிட் டப்பால்நீயுங்
காங்கையிலேயதிகமானால் நீர்ச்சிவந்து
கடகடவென்றேயிறங்கும் பீங்கானுள்ளே
தாங்கையிலேயிவையெல்லாங் குடத்தில்வாங்கே
சார்வாகவைத்தபின்பு சொல்லக்கேளு
தூங்கையிலேகண்டதொரு சகுனம்போலச்
சொற்பனமாயெண்ணாதே யின்னங்கேளே. 264

கேளடாசூதமது சேர்தானன்கு
கெடிபெறவேயேட்டில்வைத் திராவகத்தைக்குத்தி
சூளடாநெருப்பில்வைத்து வறுக்கும்போது
துப்புறவாய்மாவைப்போ லாகும்பாரு
கோளடாவாராமற் சீனமூன்று
கொடியதொருவெடியுப்பு பலமுமூன்று
வேளடாவெரிந்தசிவன் பூநீற்காலும்
$ வெள்ளையென்றபாஷாணம் பலமிரண்டே. 263

ரெண்டானவுப்பதனை வறுத்துப்போடு
நேரானசாரமது பலந்தானென்று
தண்டானதுருசதுவும் பலந்தானென்று
தான்வறுத்துபோட்டுவிட் டின்னங்கேளு
தெண்டானவன்னமென்ற பேதிதானுஞ்
சேர்க்கவேசொல்லுகிறேன் பலமிரண்டு
குண்டானதிவையெல்லாஞ் சூதத்தூளிற்
கொட்டியேதான்கலக்கிக் குப்பிக்கேற்றே. 266

ஏற்றியேவாலுகையின் மேலேவைத்து
யென்னசொல்வேன்கமலம்போற் றீயைமூட்டு
போற்றியேசெந்தூரம் வைத்தாப்போலப்
போக்கோடேமண்ணளவு முருகுமட்டு

---

* தீநீர் - திராவகம். $ வெள்ளைபாஷாணம் - சங்கு பாஷாணம்.

மாட்டியேமுச்சாமந் தீயைப்போடு
வப்பனேயடுப்பேற்றி மறுநாள்மூட்டு
தூற்றியேநாலாநாட் பனிரண்டுசாமந்
துப்புறவாய்த்தீமூட்டி யப்பால்வாங்கே. 267

வாங்குவதுகுளிரநன்று யாறவிட்டு
வாகுபெறவடுப்பைவிட் டிறக்கிநீயும்
தாங்குவதுபோலேநீ * குப்பிதன்னைத்
தானுடைத்துப்பார்த்திடவே யென்னசொல்வேன்
பாங்குபெறதேங்காய்போ லிருக்கும்பாரு
பருவமாய்த்தானுதிர்த்துப் பலந்தானெட்டு
ஏங்குவதுபோலேநீ யெண்ணிடாதே
யிதமாகச்சேர்க்கும்வகை யினிமேற்கேளே. 268

இனியதொருசரக்குவகை யின்னங்கேளு
இயல்பானகல்லுப்புப் பலந்தானாறு
கனியதொருபூநீறு பலந்தான்ரண்டு
கண்டரென்றதுருசுதான் பலமும்நாலு
வனியனெனுஞ்சீனமது சொல்லக்கேளு
மைந்தனேபலமதுதா னென்றரையுமாகும்
பிணியனென்றுநோய்களுஞ் சாரந்தானும்
போக்கோடேபலமரைதான் புகழாய்க்கூட்டே. 269

கூட்டவேவெடியுப்பு பலந்தான்கேளு
குறையாமலொன்றரையாம் பலமேதூக்கி
வாட்டவேயிவையெல்லாங் கல்வத்திட்டு
வப்பனேதுருசுப்பு வறுத்துப்போடு
காட்டவேயொன்றுமில்லை திராவகத்தினாலே
கனக்கவேயறையாதே மந்தித்தப்பா
ஊட்டவேசிறுதணலில் வறுத்துக்கொண்டு
உத்தமனேகுப்பிதனி லடைத்திடாயே. 270

அடைத்துமேயரைவாசி மட்டும்போட்டு
அப்பனேவாலுகையில் முன்போல்வைத்து
படைத்துமேமுச்சாமந் தீயைப்போட்டு
பருவமாய்ராக்கால மாறப்போட்டு

---

* குப்பி - அரக்கு புட்டி.

விடைத்துமேநாலாநாட் டீயைப்போடு
விபரமுடன்பனிரண்டு சாமமாகு
முடைத்துமேஐந்தாநாட் டன்னிநீயு
முற்றுநீபார்த்திடவே வீரந்தானே. 271

தானென்றவீரமதை யென்னசொல்வேன்
சதாசிவனுர்நெற்றிக்கண் தானேயாகுங்
கோனென்றவீரம்விட்டால் வாதம்போச்சு
கொடியதொருசுண்ணமையா விதனிற்கோடி
தேனென்றபரங்கிவைப்பு தீர்க்கமில்லை
திரும்பவதைமடித்துவைத்தாற் றிறமதாகும்
ஊனென்றவீரத்தின் போக்கைச்சொன்னேன்
உத்தமனேயெத்தொழிலு மிதுதானுமே. 272

ஆகுமேமற்றமற்ற வீரமெல்லாம்
அப்பனேவைத்தியத்துக் காகும்பாரு
மேகுமேயிந்தமுறை வீரந்தானும்
போக்கோடேயெத்தொழிலுஞ் செய்யலாகும்
வேகுமேயிவ்வீரச் சுண்ணமானல்
வெகுசுறுக்குவாதமுறை கைக்குள்ளாகுஞ்
சாகுமேசரக்கெல்லாஞ் சுண்ணமாகுந்
தனித்துநின்றபூரத்தின் வைப்புகேளே. 273

## பூர வைப்பு

கேளடாகூடனது பலந்தானென்று
கெட்டியாய்ப்பூநீறு பலமதொன்றும்
நாளடாவெடியுப்புக் கழஞ்சுரண்டும்
நாட்டுவாய்கல்லுப்பு கழஞ்சுயொன்று
சூளடாசாரமது கழஞ்சிவொன்று
துப்புறவாய்வெண்காரங் கழஞ்சியொன்று
கேளடாவாராமற் கல்வந்தன்னில்
கொட்டியேதானரைக்கக் கூறுவேனே. 274

கூறுவேன்கல்லுப்பை வறுத்துப்போட்டுக்
கொடியதொருசரக்கையெல்லாஞ் சுகமாய்ப்போடு
ஆறவேபசுவினெய் யதிலேகொஞ்சம்
அப்பனேவிட்டுநீ ரவியிற்போடு

ஊறவேசாமமது சென்றபின்பு
உத்தமனேகூடனது பொங்கிநிற்குந்
தேறவேபதமென்று மறுகால்நீயுந்
தீர்க்கமாஞ்சூடனதிற் கழஞ்சிபோடே. 275

போட்டுபுழகதிலே கழஞ்சிகூட்டிப்
பொங்காமல்நெய்யைவிட்டு மறுகாலாட்டு
ஊட்டுமேயுறுதியா யாட்டிக்கொண்டு
உத்தமனேசாமமது சென்றபின்பு
நாட்டுமேகாசியென்ற மேருக்கேற்றி
நாதாந்தசத்தியைநீ பூசைபண்ணி
தேட்டுமேயிதைவிட்டாற் றேட்டமுண்டோ
சிவசிவாதாளிதனில் மணலைக்கொட்டே. 276

கொட்டியேநாலுவிரற் கனந்தானப்பா
கூறுவேன்கல்லுப்பைப் பொடியாய்ப்பண்ணி
ஊட்டியேநெற்கனமா யதின்மேலிட்டு
உறுதிபெறக்குப்பிதனை நடுவில்வைத்து
கட்டியேமணலையதின் கழுத்துமட்டுங்
கனக்கவேசொப்பனிட்டு சொல்லக்கேளு
பட்டியாய்த்திரியாதே குப்பிவாயை
பழக்கமாய்த்திரிந்துநீ வைத்திடாயே. 277

வைத்திட்டுவாலுகையிற் றீபம்போல
மைந்தனே * கடிகையிது சென்றபின்பு
பொய்த்திட்டுப்போகாது புகைமேற்செல்லும்
பொருமியேகுப்பிவா யுடைத்துப்போகுங்
கைத்திட்டமாகவேதான் கமலத்தீயாய்க்
கவனமாய்ப்போட்டுவிடு சாமமூன்று
மெய்த்திட்டமாகவேதா னனல்தான்மீறி
வெடித்துவிடுங்குப்பியது வீழ்வாய்ப்போமே. 278

போகாமற்பத்திரமா யிருந்துக்கொண்டு
பூரணியைமனதில்வைத்து தியானஞ்செய்து
ஏகாமற்சரக்குகளைப் பார்த்துக்கொண்டு
என்மக்காள்கவனமதா யிருந்துகொண்டு

---

* கடிகை - நாழிகை.

சாகாமனின்றதொரு தலையுமாகுஞ்
தண்ணுமடாசரக்குகளை யிந்தபுரம்
வேகாமற்சரக்குகளை வேகவைக்கும்
வெகுசுருக்குச்சுண்ணத்துக் காதியாமே. 279

ஆதியாங்குப்பிதனை யாறப்போடு
அப்பனேயுடைத்துபார் பூரந்தானுஞ்
சோதியாமிளங்தேங்காய் போலநிற்குஞ்
சொல்லுவேனிதன்பெருமை சுண்ணத்தாதி
வாதிகளேயிதையெடுத்து வைத்துக்கொண்டு
மகத்தானசரக்குகளைச் சுண்ணம்பண்ணு
பாதியாய்நின்றதொரு § மதியைச்சூடும்
பரனெனக்குச்சொன்னவித்தை பார்த்தோநாமே. 280

## குடோரி வைப்பு

பார்த்துமேசொல்லுகிறேன் * குடோரியென்று
படிகமாய்வெடியுப்பு நாவாங்காச்சற்
சேர்த்துவெண்காரம் பூநீற்சூதந்
திறவான $ வெள்ளையொடு தாளகமுஞ்சாரம்
வார்வதுமேகல்லுப்புவகை யொன்றுக்கு
வப்பனேபலமது தானுலுங்கூட்டி
ஏர்த்துமேகல்லுப்பை வறுத்துப்போடு
இதமானரேக்கதிலே கழஞ்சுகூட்டே. 281

கூட்டவேவீரமதிற் கழஞ்சிக்கூட்டிக்
கொட்டியேயிவையெல்லாங் கல்வத்துள்ளே
நாட்டவேயெருக்கன்பாற் றன்னைவிட்டு
நலமாகவரைத்து விடுசாமம்நாலு
ஆட்டவேவெருக்கனுட பழுப்பின்சாற்றால்
அரைக்கவேநாலுசாம மரைத்தபின்பு
வாட்டவேரவிதனிலே ஊரவைத்து
மைந்தனேகாசியென்ற மேருக்கேற்றே. 282

ஏற்றவேவாலுகையின் மேலேவைத்து
என்னசொல்வேன் தீயைவிடுகமலம்போலே

---

§ மதி - சந்திரன். * குடோரி - கொடோரிபாஷாணம்.
$ வெள்ளை - சங்குபாஷாணம்.

போற்றியேபன்னிரண்டு சாமமானாற்
 பொருந்திநின்றபதமொன்று நெளிப்பையாற்றி
மாற்றியேகுப்பிதனை யப்பால்வாங்கி
 மைந்தனேயுடைத்துப்பார் தேங்காய்ப்போலாம்
ஆற்றியேமஞ்சளுட ரேக்கைப்பற்றி
 யதிலிருக்குங்குடோரியைநீ யெடுத்துவையே. 283

எடுத்துநின்றகுடோரிதனை வாத்தான்முன்னே
 இதமாகவைத்துநீ பூசைபண்ணே
தொடுத்ததொருசாக்குகளைக் கரைத்துநீருய்ச்
 சோதிபெறசக்திலதாய்ச் சவுலையாடு
மடுத்ததொருகுடோரியென்ற காரமாகு
 மப்பனேயிதன்பெருமை யாருஞ்சொல்லார்
விடுத்ததொருசரக்கிதுதா னுருக்கினத்துக்காதி
 விபரமிதிற்சொல்லிவைத்தேன் விளம்பக்கேளே. 284

## சூடன் வைப்பு

கேளடா * சூடனுட வைப்புதானுங்
 கீர்த்தியாய்ச்சித்தர் சொல்லவேயான்
நாளடாவாழைபைத்தான் வெட்டிப்போட்டு
 நலமாகக்கிழங்குதனைக் குடைந்துவைத்தாற்
சாளடாமறுநாட்டா னுற்றுப்பாரு
 சலமதுதான்நிரம்பிநிற்கு மெடுத்துக்கொண்டு
வாளடாபடிதானு மிருபதாகு
 மைந்தனேயெடுத்துநீ பாண்டத்தூத்தே. 285

ஊத்தடாசெப்பினுட பாண்டந்தன்னி
 லுத்தமனேவெடியுப்பு ஐந்தாங்காச்சல்
சேத்தடாவுப்பதுதான் மிறிக்கக்கேளுந்
 திறமையாயுப்புத்தான் பாண்டத்திட்டு
வாத்தடாகாடியது யமுங்கவிட்டு
 மைந்தனேகுங்கிலியம் பத்துக்கொன்று
பாத்தடாவெள்ளையா யெடுத்துக்கொண்டு
 பக்குவமாயுருக்கியதி லிட்டிடாயே 286

* சூடன் - கருப்பூரம்.

இட்டுமேயடுப்பிலிட்டுக் காய்ச்சும்போது
இதமாகக்குழம்பதுபோற் பதத்தைப்பார்த்து
தொட்டுமேயெலுமிச்சம் பழத்தின்சார்
சுருக்கிடவேகுத்தி நீ காய்ச்சும்போது
கட்டுமேஉலையதனிற் கருதிப்பாரு
கனக்கவேயுரைந்துவிடும் பதமென்றேதாம்
போட்டுமேபுதுசட்டி தன்னிலேதான்
புகழ்பெறவேயூற்றிவிடு யுப்புநீரே. 287

நீரிட்டசட்டியைத்தான் மூடிப்போடு
நிறைந்துமேமூன்றுநா ளானபின்பு
காரிட்டவுப்பதுதா னென்னசொல்வேன்
கம்பியென்றால்பெருங்கம்பி யாகும்பாரு
சீரிட்டவுப்பதனைக் காயப்போடு
தீர்க்கமாயெட்டுசேர் நிறுத்துக்கொண்டு
வாரிட்டவாழையுட ஜலத்திலேதான்
மைந்தனேகலக்கிவிடு வகையிதாமே 288

வகையானதொன்றுமில்லை பாண்டந்தன்னை
மைந்தனேயடுப்பில்வைத்து காய்ச்சும்போது
இகையானகருவாப் பட்டைதன்னை
யிதமாகத்தானெடுப்பாய் விசையொன்று
துகையானவிதையிடித்துப் பாண்டத்திட்டு
துப்பறவாய்க்காடியது தூணியிட்டு
பகையில்லாவெல்லமொடா பனையின்வெல்லம்
பாங்குடனேசேரிரண்டு பார்த்துப்போடே. 289

போட்டுமேகலக்கிநீ யூறப்போட்டு
போக்கோடேமத்தைவிட்டுக் கிண்டும்போது
ஊடுமேகையிடையிற் சிறியதானால்
உத்தமனேமறுபாண்டம் தன்னிலூற்றி
காட்டுமேயடுப்பிலிட்டுப் பானைமூடி
கவிழ்த்தியேகுழையிலிட்டு வாங்குவாங்கு
தீட்டுமேதிராவகம்போ லிறங்கும்பாரு
திறமானபீங்கானிற் பதனம்பண்ணே. 290

பண்ணவேமுன்னுறைத்த வாயைநீர்தான்
பற்றியேவருகையிலே திராவகத்தைவாரு
எண்ணவேபடிரண்டு கூடவாரு
யிதமாகக்கிண்டியே மூடிப்போடு
கண்ணவேகாற்றில்லா விடத்திலேதான்
கனமதாய்மூடியடா சொல்லக்கேளு
வண்ணவேயொன்பதுநாட் கழிந்ததானல்
வாங்குபெறத்திறந்துபார் சூடனமே 291

ஆகுமேயாலாத்திப் பூரமாச்சு
அப்பனேயதைக்கட்ட வாராலாகும்
போகுமேசுண்ணமென்ற கட்டுக்கெல்லாம்
போக்கோடேபாரையுப்பு பண்ணினுக்கால்
ஏகுமேதலையென்று மிதற்குப்பேரு
தாகுமேயக்கினியாங் சூர்மாச்சு
சச்சிதானந்தவெளி தானேபாரே. 292

## அஞ்சன பாஷாண வைப்பு

தானென்றவஞ்சனமாம பாஷாணத்தைச்
சாற்றுவேன்வகைவிபர மாகக்கேளு
ஊனென்றரசமதுதான் பலமுமெட்டு
உத்தமனேசந்தியது பலமிரண்டு
வானென்றகெந்தகத்தை யோட்டிவிட்டு
மைந்தனேவுருகையிடல் ரசத்தைக்கொட்டித்
தேனென்றகுச்சியினுற் கிண்டும்போது
சிவந்துமேகரியாக விருக்கும்பாரே. 293

பாரேநீரசத்தூளைக் கல்வத்திட்டு
பருங்கம்பிவெடியுப்புப் பலமிரண்டு
காரேநீதாளகமும் பலமுமொன்று
கருவானவாள்காட்டி முட்டைநீரால்
வாரேநீகல்வமதிற் றிரட்டிக்கொண்டு
மைந்தனேரவியில்வைத்துப் பொடியாய்ச்செய்து
ஆரேநீவயத்தாற் குப்பிதானும்
அப்பனேலேசா யடித்திடாயே. 294

அடித்துமேயொருசிலை மெதுவாய்ச்செய்து
அதனிலேரசத்தூளைக் கொட்டுவாய்நீ
பிடித்துமேதாளியிலே மணலையிட்டுப்
பேசாதேகுப்பிவைத்து வாயைமூடி
துடித்துமேதிரியாதே கமலத்தீயாய்த்
தோணவேபனிரண்டு சாமந்தானுங்
கடித்துமேதோளேர்வது போலேதானுங்
கட்டுமடாலேசாகப் பதங்கமாமே. 295

ஆகுமேகுப்பியைத்தா னப்பால்வாங்கி
அதிதனக்குநீர்தெளித் தாறப்போட்டு
போகுமேகுப்பியைநீ யுடைத்துப்பாரு
பொன்போலேபதங்கமது மேரிநிற்குந்
தாகுமேயிதன்பெருமை சொல்லக்கேள்நீ
சார்வானவஞ்சனபா ஷாணந்தான்
ஏகுமேபாண்டமது யிருப்புத்தொட்டி
யினதடியில்நின்றது ரத்தம்பாரே. 296

## சிங்கி வைப்பு

பாரேநீயின்னமொரு தொழிலைக்கேளு
பாங்கானசிங்கியுட வைப்புதன்னை
சேரேநீகாரீயஞ் சொல்லக்கேளு
திறமையாய்ப்பலமதுதா னிருபதாகும்
நேரேநீகந்தகந்தான் பலமுமஞ்சு
நேரானவெடியுப்பு ரண்டரைப்பலந்தான்
வாரேநீதாளகமும் பலமிரண்டு
மைந்மனேவிதுவெல்லாம் பொடியாய்ப்பண்ணே. 297

பண்ணியேயியமதை யோட்டிவிட்டுப்
பக்குவமாயடுப்பினில் வைக்கும்போது
கண்ணவேபொடிகளைநீ தூவித்தூவிக்
கருகவேகருங்கிநீ விடியஞ்சாக
எண்ணவேயிவையெடுத்துக் கல்வத்திட்டு
விதமாகப்பொடிப்பண்ணித் தோண்டிவிட்டு
சொன்னதொரு மேல்மூடிச்சிலைசெய்து
துடியாகவாலுகையில் வைத்திடாயே. 298

வைத்துமேபனிரண்டு சாமந்தியை
மைந்தனேசலம்போ லெரிநோபாகப்
பொய்த்துமேபோகாது யப்பால்வாங்கி
பூரிப்பாய்ச்சலமதனைத் தெளித்தேயாற்றி
அய்த்துமேபேசாதே யுடைத்துப்பாரு
அப்பனேசிறுகம்பி போலேநிற்கும்
நைத்துமேதானெடுப்பாய் மஞ்சள்வண்ணம்
நாதாக்கள்மகிமையிதி லாட்டுந்தானே. 299

ஆட்டானசிங்கியைத்தான் மெழுகுபண்ணு
அப்பனேசுன்னமது வாகச்செய்நீ
பட்டானதொன்றுமில்லை சிங்கிவிட்டால்
பாரிக்கும்வெகுகோடி தொழில்களாகுந்
தேட்டானதொன்றுமில்லை சிங்கிவிட்டால்
சிவசிவாரசந்தனக்கு வழியுமாகும்
மூட்டானதொன்றுமில்லை யென்பதாய்பூசை
முதன்மையாய்ச்செலுத்திடவே சித்தியாமே. 300

கற்பம்

சித்திக்குமின்னமொரு தொழிலைக்கேளு
திறம்பெறவேசொல்லுகிறேன் கற்பந்தன்னை
முத்திக்குஞ்செங்கடுக்காய் கொண்டுவந்து
முறைமைபெறச் சிறுநீரிலூறப்போட்டு
சுத்திக்குமிதுநல்ல தாகுமாகுந்
தூள்பண்ணிக்கலசமதி லடைத்துக்கொண்டு
பத்திக்கும் 1 வெருகடிதான் வெந்நீரிற்கொள்ளு
பருவமுடன்மண்டலங் கொண்டுதேறே. 301

கொண்டுமேயானபின்பு சொல்லக்கேளு
கூறுவேன்மிளகதனை பெரிதாய்ப்பார்த்து
தண்டுமேரவநீரி லூறப்போட்டுத்
தாக்கடாமிளகதனை யஞ்சதாக
உண்டுமேதினந்தோறு மிந்தபாகம்
உத்தமனேயிருபதுநா ளூறுமாகும்
பண்டுமேயைந்தாகக் குறைத்துவாநீ
பக்குவமாய்ச்சொல்லுகிறே னின்னங்கேளே. 302

1 வெருகடி - பூனையடியதே மூவிரற் பிரமாணம்.

கேளடாமிளகத்தான் கொள்ளும்போது
　　கிருபைபெற 1 வமுரியுடன் சேர்த்துக்கொண்டு
கேளடாவாராம லமுரிதன்னை
　　குமிப்பாகத்தேத்தாநின் வித்தைவிட்டு
பாளடாபோகாம லுப்புச்சுண்ணம்
　　பரிவாகவிராகனிடை கூடப்போட்டு
வாளடாதேய்த்துவிடு தெளிந்துபோகு
　　மைந்தனேகற்பத்துக் குறுதியாமே. 303

உறுதியாயிப்படியே செய்துகொண்டு
　　உத்தமனேகொண்டுவா நீகாலைநேரம்
பருதியாய்காலையிலே சூரணந்தானுண் ணு
　　பக்குவமாய்ச்சொல்லுகிறேன் பாகங்கேளு
கருதியாய் 2 கரிசலை குப்பைமேனி
　　கனசெருப்படை விடைத்தலைவேரும்
அருதியாம்பொற்கொன்றை 3 கரந்தையோடு
　　அப்பனேதூதுவளை யாகுமெண்ணே. 304

எண்ணவேவல்லாரை யைங்கோல்வித்து
　　இதமானசாதிக்காய் பத்திரியுங்கிராம்பு
சொன்னதொருசரக்கெல்லா முலரவைத்துச்
　　சொற்பெரியமந்தாரை வெள்ளைப்பூவும்
அன்னமேமல்லிகைப்பூ நிறப்பனையின்கிழங்கு
　　அப்பனேவகையொன்று பலமொன்றாகப்
பண்ணவேசூரணமாய்ச் செய்துகொண்டு
　　பாலகனேயெட்டிலொன்று கற்கண்டைக்கூட்டே. 305

கூட்டியேவெருகடிதா னெடுத்துக்கொண்டு
　　குலமானமுட்பன்றி னெய்யதனுல்
ஆட்டியேகொண்டுவிடு மண்டலந்தானென்று
　　அப்பனேமாலையென்ற நேரந்தன்னில்
நீட்டியேகபலையின் குளகுகற்பம்
　　நினைவாகக்கொண்டுவர பருவஞ்சொன்னேன்
வாட்டியேதிரேகத்தி லுள்ளநீரை
　　வாங்கியேயிறக்கிவிடு மைந்தாபாரே. 306

---

1 அமுரி - மூத்திரம்.　　2 கரிச்சாலை - கரசலாங்கண்ணி.
3 கரந்தை - முதற்குறை சிவகரந்தை.

பாரேநீவா தபித்தம் பிரிந்துபோகும்
 பார்க்கையிலேபித்தமது பறந்துபோகும்
காரேநீசிரசினின்ற கற்பகத்தைச்சாடுங்
 கனமானகோழையது கழன்றுபோகும்
வாரேநீயமுர்தமது பெருகியூறும்
 மைந்தனேநரம்பெல்லா மிறுகும்பாரு
சேரேநீவிந்துவது மணிபோலாகும்
 திறமையாமாயத்திற் சிக்கொணாதே. 307

சிக்காமலப்புறத்தில் நின்றுகொண்டு
 தினந்தோறும்வாசியுட தாரணையைப்பாரு
தாக்காமல்போகுமடா பிரபஞ்சந்தான்
 தன்மையாய்ச்சொல்லிவைத்தே னிந்தநூலிற்
பார்க்காமற்கெட்டார்க ளுலகத்தோர்கள்
 பாழானமனதையெங்கு வலையொட்டாதே
சேர்க்காமல்சேர்க்குமடா சித்தரோடே
 சென்றபின்புசித்தரென்ற பேருமாமே. 308

பேரானரோமனுட பிள்ளையென்று
 பெருமைபெற்றுக்கொண்டுநீ வந்தாயானாற்
கூராகுமெந்தனுக்குக் கீர்த்தியுண்டு
 கூப்பிடுவே னுன்னையுந்தான் பிள்ளையென்று
ஆராகுஞ்சித்தருட நூலைப்பார்த்து
 அங்கங்கேதேறுவது யருமைமெத்த
சீராகுமென்னாலோ குருவுமாகுஞ்
 சித்தருக்குமெத்தொழிலுந் திரமாய்த்தானே. 309

திறமானகற்பமொன்று சொல்லக்கேளு
 சிவசிவாருத்திரனென்ற கற்பமாகும்
முறமானசீந்தியடா பெரிதாய்ப்பாரு
 வேரோகோகோவேரையுநீ யுள்ளேதோண்டி
நிறமானவேராண்டு மட்டுமானுள்
 நேரானகணேசனைப்போற் கிழங்குதோன்றுஞ்
சலமானவாசியைநீ யுள்ளேபூட்டித்
 தம்பித்தேவாலையைநீ தியானம்பண்ணே. 310

பண்ணவேயென் தாயார் கிருபையாலே
பதனமாய்க்கிழங்குகளை யெடுத்துக்கொண்டு
உண்ணவேமேற்றோலைச் சீவிப்போட்டு
வுறுதிபெறப்பாக்கதுபோற் றுண்டுபண்ணி
எண்ணவேநிழலுலர்த்தா லுலர்த்திக்கொண்டு
இடித்துமேதூளாக்கி யப்பாற்கேளு
சண்ணவேயெட்டிலொன்று * சீனிதானுஞ்
சரிகூட்டிரேகித்து யப்பால்வையே. 311

வையென்றசூரணத்தை யந்திசந்தி
மைந்தனேகொண்டுவர விபரம்கேளு
பொய்யென்றுபோகாதே சிந்திற்றண்டை
போக்கோடேமேற்றோலை யப்பால்வாங்கி
நையென்றுதட்டியே பலமுமொன்று
நாட்டடாபடிநீரு மளந்துவிட்டு
மெய்யென்றுமனதில்வைத்துத் தியானஞ்செய்து
விரவியேயெட்டொன்றுய்க் காட்டிடாயே. 312

காய்ச்சியதோர்கியாழத்திற் சூரணத்தோடொக்க
கருதியேகொண்டுவர மண்டலந்தானப்பா
பாய்ச்சியதோர்நரைதிரைக ளெல்லாம்போகும்
பக்குவமாய்க்காயசித்திக் கிதுவேயாகுந்
தாழ்ச்சியில்லைப்பொருளைநீ கண்டாயானல்
சாவில்லையுந்தனுக்குத் தாழ்வராது
வாய்ச்சியெனுமென் தாயார் கிருபையாலே
வருண்மீறும்பொருண்மீறு மறிந்துபாரே. 313

## சதுரக்கள்ளி கற்பம்

பார்க்கவேசித்திக்குஞ் சாவோயில்லை
பரிபாஷைக்கருவாகச் சொன்னார்பாரு
ஏர்க்கவேயிந்தமுறை கற்பந்தன்னை
யிணக்கமாய்ச்சொல்லிவைத்தா னிடையில்லாமற்
சேர்க்கவேகற்பத்தை யுண்டபின்பு
திறமானகற்பமொன்று சொல்லக்கேளு
தீர்க்கமாமன்மதனைக் காட்டிற்றானல்
திரமானசதுரமாங் கள்ளிக்காயே. 314

* சீனி - சருக்கரை.

காயானதொன்றுமே பலமொன்றுக்குக்
கைத்தாழஞ்சோறு மாகுஞ்சலமூன்றுந்
தாயானகடுக்காய்தான் பலமுமொன்று
தப்பாமல்விரைப்போக்கிப் பொடித்துக்கொண்டு
சேயானகைதன்னால் பிசைந்துக்கொண்டு
திறமைடாய்வடிகட்டிச் சலத்தைவாங்கி
மேயான 1 யேரண்டத் தெண்ணெய்தானு
முருகழஞ்சுவிட்டதிலே யிதமாய்க்கொள்ளே. 315

கொள்ளவேமலமொதுங்கத் தள்ளிப்போடுங்
கொடுமையென்ற 2 வழலையெல்லாங் கக்கும்பாரு
மெள்ளவேபால்கஞ்சி வைத்துக்கொள்ளு
மேல்நின்றபித்தமெல்லாங் கீழேசாடும்
கள்ளமொன்றுவாராது மலங்கடன்னை
கண்டிப்பாய்க்கழண்டுவிடுங் கருத்தாய்சொன்னேன்
பள்ளமென்றபடிகுழியில் வீழ்ந்தாயானாற்
பயனறியக்காமமது கொல்லும்பாரே. 316

பாரப்பாகற்பவிதி சட்டைநாதர்
பாடியதோர்சாஸ்திரந்தான் மெத்தநன்று
தேரப்பாவன்னாலு மின்னாலும்பார்
திறமாகுங்கற்பவிதி யுறுதிமெத்த
ஆரப்பாயெங்களைப்போல் சொல்வாரில்லை
அவரவர்களனேகவித்தை யாகச்சொன்னார்
காரப்பாகற்பங்கட் காணமாட்டார்
கருத்துவைத்துயிர்நூலைப் பாருபாரே. 317

பார்க்கவேபத்தியத்தைச் சொல்லக்கேளு
பருவமுடன்புகையாகா புளியுமாகா
ஏர்க்கையிலேயுப்பாகா யெண்ணெயாகா
யிதமானபெண்ணோடு சுண்ணம்பாகா
சேர்க்கையிலேமோராகா துவற்பமாகா
தீர்க்கமாய்கடுகாகா 3 உள்ளியாகா
தார்க்கையிலேநித்திரையும் கோபமாகா
தனிநாட்டகுறிதனிலே சார்ந்துநில்லே. 318

---

ஏரண்டம் - ஆமணக்கு. 2 வழலை - உப்பு. 3 உள்ளி - வெள்ளைப்பூண்டு.

நில்லென்றுலொருமனதாய் நிற்கவேணும்
நிலையானமவுனத்தைக் காணவேணும்
வெல்லென்றுல்மனதரிவை வெல்லவேணும்
வேதாந்தசாஸ்திரத்தைக் காணவேணும்
பல்லென்றுல்ஞானவிதி கற்கவேணும்
பன்மமென்ற ரசத்தைத்தள்ளவேணும்
இல்லென்றுல்வையத்தை தோய்ந்துபோகும்
இதுதனுக்குவிசைவருவோ விண்ணுள்ளோர்க்கே. 319

உள்ளபடிசொல்லுகிறேன் கற்பத்துக்கு
உறுதிபெறப்பத்தியத்தைச் சொல்லக்கேளு
கள்ளமொன்றும்வாராது பசுவினெய்யாங்
கருகியதோர்பாலாகுந் தேனுமாகும்
விள்ளவேசிறுபயறு முறுங்கையாகும்
வெள்ளையென்றவழுதலங்கா பிவைகளாகுங்
கொள்ளவேதூதுவேளை யிலையுமாகுங்
கூட்டுவாய்நெல்லிக்கா யவரக்காயே. 320

காயானபீர்க்கங்காய் பொன்னுங்கண்ணி
கருவாடுசிறுகீரை கஞ்சாவாகுந்
தாயானவெள்ளாடு காடையாகுஞ்
சாற்றுவேன்வல்லாரை முயலுமாகும்
பாயானமானுகும் பறையுமாகும்
பக்குவமாப்பானைவெல்ல வஸ்துவாகுஞ்
சேயானபிள்ளைகளா யுங்களுக்குத்
தீர்க்கமாய்ச்சொல்லிவைத்தேன் றிறமாய்த்தானே. 321

திறமானபத்தியத்துக் கமுதுகேளு
தீர்க்கமாய்க்கருங்குருவை நெல்லுக்குத்தி
உறமானவரிசியது வரியில்லாமல்
உத்தமனேதீட்டியதை வைத்துக்கொண்டு
திறமானகையதனல் சேரவாங்கி
தீர்க்கமாய்ச்சமைத்துநீ யொருபோதுண்ணும்
பரமானபராபரத்தைப் பூசைசெய்து
பாங்காகவொருபோது வெந்நீர்கொள்ளே. 322

கொள்ளவேபழமாகுஞ் சீனுபாகுங்
கூறுவேனிப்படிநீ பத்தியத்தையுண்டு
விள்ளவேவேண்டாங்கா ணூர்க்காணுலும்
வேதாந்தவாலையைநீ நித்தம்பூசி
வள்ளவேஞானமென்ற வமுர்தந்தன்னை
வாகாசபரவெளியி லமர்ந்துநில்லு
தெள்ளவேவேணுமடா லோகவாழ்க்கை
சச்சிதாநந்தவெளி தன்னினில்லே. 323

தன்னிலையைத்தானறிந்து பார்க்கவேணுஞ்
சதாகித்தியங்குருபதத்திற் சாரவேணுங்
கண்ணிலேமனக்கண்ணே பார்க்கவேணுங்
கவனத்தார்கெவுனமதிற் சொல்லவேணும்
மென்னிலையைநீயறிந்து வருகவேணு
மென்குருவாம்புசண்டருட கிருபைவேணும்
முன்னிலைக்குகற்பமறிந் துண்ணவேணு
மூர்க்கருடன்கோபத்தைத் தள்ளுதள்ளே. 324

## மூதண்ட கியாழம்

தள்ளடாகற்பம துண்ணும்போது
சரீரத்தில்வெட்டையது மீறிற்ருனல்
கொள்ளடா * மூதண்ட கியாழந்தன்னை
கூறுவோமறுகன்வேர் பிடிதாஞென்று
விள்ளடாமிளகதுதா னிருபத்தஞ்சு
விசிதமாய்ப்படிசலத்திற் கூடப்போட்டு
தள்ளடாகியாழம தாழாக்காணல்
தேவாகவெண்ணெயிட்டுக் கொண்டிடாயே. 325

## தலைமுழுகத் தைலம்

கொண்டுவிடுபோக்களவு வெண்ணெயிட்டுக்
குடிலமென்றகுதிப்பெல்லாம் மடங்கிப்போகுங்
கண்டுகொள்ளுந்தலைமுழுக வரிசைகேளு
கனமானமிளகுடனே கடுக்காய்நெல்லி

---

* மூதண்டக்கியாழம் - அறுகுவேர்க் கியாழம்.

உண்டுகொள்ளுசாதிக்காய் மஞ்சள்வேம்பு
வுத்தமனேபருப்புடனே மஞ்சள்கூட்டி
பண்டுகொள்ளுவாவின்பாற் நன்னுலாட்டி
பக்குவமாய்க்காய்ச்சியதை முழுகுவாயே. 326

முழுகவே * பட்சமது தனக்குநீயு
முறைமையுடன்வாரமதில் நெய்யுமூழ்கு
தழுகவேமாதரிடஞ் செல்லவேண்டாஞ்
சண்ணுமடாமாய்க்கையைநீ தள்ளுதள்ளு
நழுகவேமாயத்திற் சென்றுயானுல்
நன்றுகச்சண்ணுமடா மருந்துதானுங்
கழுகவேமனக்கசடு சுத்தியாகுங்
கன்மவினைதனைப்போக்குங் கண்டுகொள்ளே. 327

கண்டுகொள்ளுமிப்படி யாகசித்தி
கருத்தில்வைத்துமனம்பிரமிக்கச் செய்தாயானுல்
உண்டுகொண்டமூர்தமதை யிருக்கலாகு
மொருவருஷமொருநாட்போ லுனக்குதோணும்
பண்டுசெய்பாழ்வினைக ளெல்லாம்போகும்
பரமகுருபாதமதைக் காணலாகுங்
திண்டுமுண்டுசெய்யாதே மகனேநீயுஞ்
சிறப்பாகபதமிலே சேர்த்துநில்லே. 328

நில்லென்றுன்மனக்குரங்கு நிற்கொட்டாது
நினைவணங்கிமவுனத் தியானஞ்செய்நீ
கல்லென்றுற்கரையுமடா யெந்தநாளுங்
கருத்தறிந்துபாருநீ கருவுந்தோணுஞ்
சொல்லென்றுர்கோடிக் கொன்றேயாகுஞ்
சொன்னாலுந்தெரியாவிட்டா லென்னசெய்வேன்
சொல்லென்றுற்பிரபஞ்ச முன்னைச்சொல்லுங்
கூடுதற்குமவுனத்தை கூறுவேனே. 329

கூறுமேமவுனமென்ற ஞானந்தன்னைக்
கூனதாற்சித்தரொன்னு ளொலித்தார்பாரு
சாறுவேன்மவுனத்தைச் சிக்கில்லாமற்
றுணிருந்தண்டமதின் மனதைப்பூணும்

---

* பட்சம் - பதினைந்து நாள்.

சாறுவேன்பண்பரிசா மூலத்துள்ளே
கண்டுபாரசாரவடி யணுவேவயாகுஞ்
சேறுவேனென்றுசொல்லி யகாரமேலே
செழுகதலவுச்சியிலே சேர்ந்துநில்லு. 330

நிற்கையிலேமகரமது யண்ணுந்துகாணும்
நினைவையதிலோட்டையிலே நின்மயமாய்போச்சு
சொன்னமதுசாவில்லை யுறுதியாச்சு
பார்க்கையிலேயொன்றுமில்லை பிரபஞ்சந்தான்
பரவெளியிலுன்மனதைப் பதியவைத்து
பார்க்கையிலேமகாரயென்ற வெழுத்தைநீயுங்
கட்டாகவுச்சிநடு மையந்தானே. 331

தானென்றஞானமது கோடியுண்டு
சமுசியங்கடராது சார்வுங்காணுர்
ஊரென்றஞானங்க லொன்றுமில்லை
யொளித்தார்கட்சித்தரெல்லாம் பேசிக்கொண்டு
சேனென்றவமுர்தமென்று விந்துவிந்து
தின்றவனேசிவயோகி சித்தன்ஞானி
வானென்றமனதையல்லோ வமுர்தத்துள்ளே
வாக்கினால்சிவயோகி சுத்தனுமே. 332

சித்தனென்றுபேர்படைத்தே னூல்கள்பாரு
சிவசிவஞானவெளி திறவுகோலார்
பத்தனென்றுலுயிர்காத்தோ னவனேயோகி
பாரமலநின்றவனே யோகியாகும்
முத்தமென்றுபேர்படைத்து நின்றோனுசான்
மூர்க்கமுள்ளகோபத்தை கடந்தவனேயோகி
வத்தமென்றவாழ்வுதனைக் கடந்தோன்ஞானி
வாகனத்தின்பொருடனை யறிவிப்போமே. 333

மவுன பெருமை

அறிவிப்பேன்வானகத்தின் வெளியிற்குள்ளே
யரனிருக்குமிடமாகு மறிந்துபாரு
தெரிவிப்பேன்காரமென்ற வெழுத்தைநீயுந்
திறமாகச்சங்கலிப்போன் மாட்டிக்கொண்டு

நெருவிப்பேனென்றுசொல்லு மனத்தைப்பூட்டு
நேருபடும்பரவெளியும் நிமிஷத்துள்ளே
தருவிப்பேன்வமுர்தத்தை மகாரம்வைத்துச்
சங்கிலியின்வழியிழுக்கத் தருகும்பாரே. 334

தருகுமேஞானமென்ற வழிக்குமப்பா
சார்வானமனமொன்றே ஞானம்ஞான
முருகுவேமனக்குரங்கை வெளிவிடாம
லூட்டடாஅகாரநுனி வுச்சிமீதிற்
பெருகுமேயமுர்தமது வென்னசொல்வேன்
பிரளுமடாகரைகடந்து வெள்ளம்போலே
வருகுமேயோகமிதன் மவுனஞான
மனம்விட்டாலொன்றுமது வந்திடாதே. 335

வந்திடாதென்றுசொல்லி பலவிதந்தான்
மாட்டினார்சாத்திரங்க ளனேகங்கோடி
முந்திடாதென்றுசொல்லி சொன்னதெல்லாம்
மோசமடாமனதுறுதி யாகுமென்றுஞ்
சிந்திடாதென்றுசொல்லி யமுர்தங்கொண்டார்
தீக்கமடாமனதுவே குருவேயாகும்
வெந்திடாதிடமல்லோ மவுனமாகும்
வெருளாமலோரிடத்தில் நின்றுல்சித்தே. 336

சித்தானமனந்தன்னை சித்திசெய்ய
தீர்க்கமாய்ச்சொல்லுகிறே னின்னங்கேளு
வித்தானமன்மதனை யறிவினாலே
விசிதமாய்பிடித்திழுத்து யகாரத்துள்ளே
முத்தானமகாரமென்ற சங்கிலியினாலே
முட்டோடேவரிந்துகட்டி அகாரத்துள்ளே
சுத்தானதடுமையங் கட்டிவைக்க
சுருதிமுடி ஞானமென்று சொல்லலாமே. 337

சொல்லிவிட்டேன்ஞானமெல்லா மவுனத்தாலே
சொற்பெரியவறிவுக்குக் கவிடதமாம்
வல்லிசெனுங் * திரோதாயின்மாய்கைபோச்சு
மயக்கமென்றவறிவெல்லா மாண்டுபோச்சு

* திரோதாயி - பஞ்சசந்தியினுடென்று.

கொல்லிமலைதனிலேறி யென்னசெய்ய
குடிகொடுத்தபரமது வந்துகூடுஞ்
சல்லியமென்றெண்ணாதே ஞானந்தன்னைச்
சார்ந்தாக்காலுந்தனுக்குச் சாவுபோச்சே. 338

பூரண லேகியம்

போச்சென்றுசொல்லிவைத்தே னின்னங்கேளு
போக்கோடேபூரணத்தின் லேக்கியந்தான்மைந்தா
போச்சென்றசடைக்கஞ்சா கொண்டுவந்து
பிசைந்தெடுத்துகுச்சிவிரை தன்னைப்போக்கி
ஆச்சென்றுதிருநீற்றின் பச்சைதன்னை
யப்பனேகொண்டுவந்து சாறுவாங்கி
நீச்சென்றுவதைத்து வதைத்துகாயப்போடு
நீதிபெறசூரணமாய்ச் செய்துகொள்ளே. 339

கொள்ளவேசூரணத்னத யப்பால்வைத்து
கூறுவேன்பாலிதுக் கின்னங்கேளு
விள்ளவேயாவின்பால் வெள்ளாட்டுப்பால்
விதமானபுங்கம்பால் பனம்பாலோடு
மெள்ளவேதேங்காய்ப்பா லத்திப்பாலும்
மேன்மையாய்வல்லாரை சீந்திற்போடு
தெள்ளவேகையாஞ்சார் வகையொன்றுக்கு
தீர்க்கமாய்படியரைதான் வீரஞ்சேரே. 340

சேர்க்கவேசொல்லுகிறே னிதையெல்லாந்தான்
திறமைபெறத்தானி லொன்றுவிட்டு
பார்க்கவேசீனியது பலந்தான்பத்து
பக்குவமாய்ப்பனவெல்லாம் பலமுமஞ்சு
கார்க்கவேயடுப்பில்வைத்து பாகாய்க்காய்ச்சி
கடைசரக்கைச்சொல்லுகிறேன் கருவாய்க்கேளு
ஏர்க்கவே * திரிகடுகு தானிக்காயு
மினியதொருகடுக்காயுங் கிராம்புமாமே. 341

ஆகுமேஅதிமதுரங் கர்ப்பூரந்தானு
மக்கிராகாரமுடன் § கருவாப்பட்டை

* திரிகடுகு - மிளகு, சுக்கு, திப்பிலி.

§ கருவாகப்பட்டை - சன்னலவங்கப் பட்டை.

போகுமேசாதிக்காய் சிறுநாகப்பூ
போஸ்தக்காய்பத்திரியும் பொருந்தக்கூட்டி
வாகுபெறவேமுடல் வெட்டிவேரு
மல்லியொடுமுந்திரிகை யபின்வெண்காரம்
ஏகுமேசீரகமும் விலாமிச்சோடு
யிவையெல்லாந்தானெடுத் தின்னங்கேளே. 342

கேளடாமாசிக்காய் பெருத்தோடு
கிருபையொடுசொல்லுகிறேன் வகையொன்றுக்கு
கேளடாவாராமற் பலங்கால்வீதங்
கொண்டுவந்துசூரணமாய் செய்துகொண்டு
வாளடபாகத்திலே போட்டுக்கிண்டி
மைந்தனேபடியரைதான் தேனும்விட்டு
சூளடாயாவிநெய்ப் படிதான்விட்டு
சூட்டுவேனின்னமுந்தான் சொல்லுவேனே. 343

சொல்லுவேன் 1 பூநாகம் பலந்தானென்று
சொற்பெரிய 2 விந்தி கோபப்பூச்சி
வெல்லுவேன்வகையொன்று பலமூன்றுக
விருதுபெற்றமுலைப்பாலி லரைத்துப்போட்டு
சொல்லுவேன்மங்கையுட நாமம்வாங்கி
தீர்க்கமாய்ச்சொல்லுகிறேன் திறமதாக
வல்லவனுநீயானல் சொல்லக்கேளு
மங்கையரைவிலகுநாட் டன்னைப்பாரே. 344

பாரப்பாவவளுடனே போகஞ்செய்து
பரிவானவிந்து நாதம்வாங்கி
சேரப்பாநாலுநாள் சையோகித்து
தினந்தோறும்பிங்கானில் வாங்கிவைத்து
ஊரப்பா 3 பூரமதை பொடைத்துபோட்டு
அப்பனேபனியில்வைக்க சலமுமாகும்
கூறப்பாய்ச்சலத்தை தவிர்த்தநீயுங்
கொட்டுவாய் 4 மாகாணி படியுமாமே. 345

படியானசெபநீரை யதிலேவார்த்து
பக்குவமாய்க்கிண்டிவிடு மெழுகுபோல

1 பூநாகம் - நாக்குபூச்சி. 2 இந்திரகோப பூச்சி - தம்பலப்பூச்சி.
3 பூரம் - ரசகர்பூரம். 4 மாகாணி - பதினாரி லொருபங்கு.

துடியானபதம்பார்த் திரக்கிக்கொண்டு
சொல்லுவேன்பீங்கானிற் பதனம்பண்ணி
வடிவானவென்தாயார் பதத்திற்றுனே
வைத்துநீபூசைபண்ணி யெடுத்துக்கொண்டு
விடியானகழஞ்சிநீரை கொண்டாயாகில்
வெல்லுவென்றுயோகத்தை முடிக்கலாமே 346

முடிக்கவேகபத்தையெல்லா மறுத்துசாடும்
மூதண்டரவிமதியுங் காட்டிகைக்கும்
நடிக்கவேபித்தத்தைக் கீழேநோக்குந்
தாதுகளேயுண்டாக்குஞ் சார்வுகாட்டு
முடித்ததொருலேக்கியத்தை மண்டலமேகொள்ளு
முன்சொன்னவகைகளெல்லாந் திறந்துகாட்டும்
பிடிக்கவேவேணுமடா யகாரவீட்டை
பேசாதேலேகியத்தின் திறமிதாமே. 347

ஆமென்றலேகியத்தை யுண்டபோது
அப்பனேகண்கள்ரெண்டுஞ் சிவந்துகாணும்
மூமென்றமன்மதன்பொற் காந்தியாகு
முத்தமனேலேகியமோ வுறுதிமெத்த
பாரென்றசூரியனி லோட்டங்காணும்
பரவெளியிற்றிருநடனங் காணலாகுந்
தேமென்றமொழியாலே கூட்டொண்ணுது
திறக்கவேபத்தியந்தான் றிடமாய்க்காரே. 348

கார்க்கவேபத்தியந்தான் றவறினுக்காற்
கணகேடுமதிகேடு திங்காயம்பாழாம்
ஏர்க்கவேகாயம தழிந்துவிட்டா
லென்னசொல்வேன்காயமது காணலாமோ
பார்க்கவேயெந்தனுட நூலைப்பார்த்து
பாழாகப்போனுக்கா லெனக்குகொஞ்சஞ்
சேர்க்கவேமனமதுதான் சொல்லாவிட்டாற்
றீர்க்கமாயென்னூலைப் பார்க்கொண்ணுதே. 349

## ரோமரிஷி தெரிசனம்

ஒண்ணுதயிந்நூலைப் பார்த்தாயானல்
உறுதிபெறவெந்தனைப்போ லாகவேணுங்

கண்ணனகண்ணகு மெந்தனுக்கு
கருதுவெனசித்தருடன் வாதுபேசி
பண்ணனபொருளறிந்து வாதம்பாரு
பார்க்கையிலேதவறிவிட்டால் வந்துசேர்வேன்
ஒண்ணுதியுன்மனதிற் குருவாய்நின்று
வோதிவைப்பேன்கருக்களெல்லா முறுதிதானே. 350

தானென்றமவுனகலைக் கியானமெல்லாஞ்
சாற்றுவேனுன்னூலிற் கலந்துகொண்டு
ஊரென்றவென்பேச்சை கடந்திடாதே
யுறுதிபெறமனதில்வைத்து குருவென்றெண்ணி
பரனென்றவுலகத்திற் சித்தர்க்கெல்லாம்
பகருவேன்ரோமனுட பிள்ளையென்று
கோனென்றவுன்குருவு மாரோவென்னிற்
கூறடாரோமனென்ற பேருந்தானே. 351

பேருதான்சொல்லையிலே சேர்வதென்பாற்
பெருமையென்றவைஞ்ஞூற்றின் பேரைச்சொல்லு
கூறுதான்குருநூலின்பெயரை சேரச்சொல்லு
கூட்டமிட்டசித்தரெல்லாம் பேசமாட்டார்
வாறுதான்புசண்டருட மார்க்கமொன்று
வாதாடிசண்டைசெய்ய மாட்டாரையா
வேறுதானுந்தனுக்கு புத்திசொல்வி
விள்ளாமலுள்ளபடி நூலுரைப்பாரே. 352

பாரப்பாசண்டரிட வர்க்கமெல்லாம்
பயப்படுவர்சித்தரெல்லாம் பாருபாரு
தாரப்பாசாபமது பலிக்குமென்றுந்
தானுரைப்பாருந்தனுக்கு தன்மையாக
சீரப்பாயெந்தனுக்கு மந்தனுகி
தீர்க்கமாயஷ்டதிக்கு வவனுருயானல்
காரப்பாயெந்தனுக்கு கீர்த்தியுண்டு
கருத்துகந்துசொல்லுகிறே னின்னங்கேளே. 353

## அஷ்டசித்தி தயிலம்

கேளடாவஷ்டதிக்கு வென்றுநீயுங்
கீர்த்திபெறவேணுமென்றுற் சொல்லக்கேளு

கேளடாவாராது யஷ்டசித்தி
கூறுவேன் தம்பனமும் வசியமார்க்கம்
வாளடாபேனமுச்சா டனத்திேேடு
மைந்தனே * வாரூட கணமென்ருக
குளரடாமோகன மாரத்தின்போக்குஞ்
சொல்லாதகருக்களெல்லாஞ் சொல்லுவேனே. 354

சொல்லுவேனஷ்டசித்தி கருவேதென்னில்
சூட்சமாய்பிண்டமது சொல்லக்கேளு
வெல்லுவேனிளங்கொடியாண் முதலாம்பிண்டம்
வெம்பியேயொன்பதிலே விழுந்ததாஞல்
சொல்லவே தானெடுத்து கொண்டுநீயுந்
தீர்க்கமாய்கத்தியிஞல் துண்டுபண்ணி
மெல்லவேகல்லுறலி விட்டுத்தாக்கி
விளம்புவேன்கட்டைப்பாரை யதனுற்குத்தே. 355

குத்தியேபாண்டத்தி விட்டுக்கொண்டு
கூட்டுவாய்தாளகமும் வீரம்பூரஞ்
சுத்திசெய்துதிருசுடனே கந்திதானுஞ்
சூட்டுவேனவுரியுடன் நீலங்கட்டி
சத்தியென்றபூநீறும் வெடியுப்பும்போட்டு
தாக்கடாவகைவகைக்குப் பலமொன்ருக
முத்தியுள்ளகருங்குருவைக் காடியாலே
மூர்க்கமுடன்தானரைத்துக் கலக்கிடாயே. 356

கலக்கியேகோடியது படியெட்டுக்கு
கண்டித்தபிண்டமெல்லா மொன்ருய்மொன்ருய்
துலக்கியேதிரியெரிப்பாய் வற்றுமட்டுத்
துப்புறவாய்மெழுகாகும் பதத்திலேதான்
விலக்கியதைக்கிண்டயி லப்பாகேளு
விதமென்னபசுநெய்யைப் போலேயாகுந்
தலைக்கிதுவேமுடிவாகு வஷ்டசித்தி
தாநடங்கும்பேருதியின் றயிலந்தானே. 357

தானென்றதயிலமதைப் பீங்கானுள்ளே
தான்வடித்தப்புறத்தில் வைத்துக்கொண்டு

* ஆரூடமென மருவியது.

தேனென்ற * வெளிக்கருவை சொல்லக்கேளு
திறமையென்னநாடுநக ரெல்லாந்தோற்று
மூனென்றபுறடிக்கு தெரியாதென்று
மொளித்துவைப்பா ருலகத்திலுள்ளபேர்கள்
மானென்றவிழிஞள் விலகிநின்ற
வார்த்தையல்லோகருவாகி வளர்ந்தவாறே. 358

வாருகேளுலகத்தி லெல்லோர்க்குந்தான்
வண்ணார்க்குத்தெரிந்திருக்கும் வளமையாக
காருகேள்கன்னியர்கள் ருதுவானாளென்று
காட்டுவார்சொற்பனம்போல் வார்த்தையாகுஞ்
சீருகேள்ளிப்படியே லோகமெல்லாந்
தீர்க்கமாய்வீட்டுக்குள் ளாகாதென்று
தூருகேள்வார்த்தையிட்டு வீட்டுக்கப்பாற்
தண்டுபண்ணிவைத்ததுமே கருவுமாமே. 359

கருவானவெளிக்கருவைச் சொல்லிவைத்தேன்
காட்டுவேனுட்கருவைக் கருதிகேளு
திருவானமங்கையின்மேற் கவனமாகி
தீர்க்கமாயடக்கமதி லொடுக்கஞ்செய்து
மருவானவார்த்தையதை மார்க்கஞ்சொல்வ
மனதஞ்சிநின்றுவிட்ட கருவொன்ருக
முருவான்விந்துவல்லே யுட்கருவுமாகு
முத்தமனேவதையறிந் துண்மைபாரே. 360

பாரப்பாஉட்கருவைச் சொல்லிவைத்தேன்
பாரவெளிக்குளுட்கருவைச் சொல்லக்கேளு
தீரப்பாயண்டாமா பிண்டத்துள்ளே
சேர்ந்துநின்றசவ்வொன்று கொடியென்பார்கள்
காரப்பாவுன்னுருவைக் கார்த்தவீடு
கருவீடுகுருவீடு கருணைபெற்ற
வாரப்பாவுனைவளர்த்த மவுனவீடு
வந்துதடாவுன்பிறகே மகனேகேளே. 361

கேளடாகோடிநெஞ்சு மாவென்பார்கட்
கிட்டாதாருக்குமுதற் றந்தானப்பா

* வெளிக்கரு - உருதுசீலை.

கோளடாவாராமல் மூன்றுபேரு
கூடிநின்றவிபரமதைக் கூறுவேன்பார்
சூளடாவிந்துவல்லோ ருத்திரனுக்குஞ்
சொற்பெரியநாதமடா விஷ்ணுவாகும்
வாளடாயுனைவளர்த்த மூலவீடு
வையகத்திற்பிர்மாவே வாள்மனையுமாச்சு. 362

ஆச்சப்பாவுட்கருவும் விபரஞ்சொன்னேன்
அப்பனேமுதற்கருவும் விபரஞ்சொன்னேன்
போச்சப்பாயிப்படியே கருக்களெல்லாம்
பூட்டிவைத்தேனெண் ணூற்றிற் புகழுஞ்சொன்னேன்
பேச்சப்பாபேசாதே யொருவரோடும்
பேசினூற்சித்தருட சாபமெய்தும்
நீச்சப்பாபெருவெள்ளம் நிலைக்கொட்டாது
நின்மனத்திற்பயம்வைத்துத் தொழிலைப்பாரே. 363

பார்க்கையிலேயொருவருடம் பேசவேண்டாம்
பரிவாகசெய்யதுஷ்ட சித்துமாடுங்
கார்க்கையிலேமுன்சொன்ன தயிலத்தோடே
கண்டுநீமுற்கருவுங் கழஞ்சியொன்று
சேர்க்கையிலேயொன்றுக்க கலந்துகொண்டு
தீர்க்கமாய்பச்சை கற்பூரம்போடு
ஏற்கையிலேகுங்குமப்பூ கோரோசனையுங்கூட்டி
யிதமானபுனுகுடனே யெல்லாஞ்சேரே. 364

சேர்க்கவேவகையொன்று கழஞ்சுவொன்று
திறமாகப்பொடித்திட்டு சொல்லக்கேளு
கார்க்கவேரவிதனி லோர்நாள்வைத்து
கடத்தினிடவாய்தனையு மடைத்துவைநீ
பார்க்கையிலேநவமியிது யாதிவாரம்
பருவமுடவந்துதென்றூற் சொல்லக்கேளு
மேற்கையிலேயென்தாயார் சக்கரத்தின்முன்னே
மென்னசொல்வேன்வைத்துநீ பூசைபண்ணே. 365

பண்ணப்பாயவனடக்கு வுண்மைபூசை
பாங்குபெறச்செய்துநீ யப்பாற்கேளு
வண்ணப்பாயப்பாலே யகாரமூர்த்தி
வாணியனும்வடுகனுட பூசைசெய்து

உண்ணப்பாவயிரவர்க ளெட்டுபேரு
முறுதிபெறவுன்னிடத்திற் காகவென்று
விண்ணப்பாதீபமுடன் தூபங்காட்டி
மெய்நிறையபூசைசெய்து யப்பால்வையே. 366

வையப்பாயட்டசித்து தயிலஞ்சொன்னேன்
மைந்தனேயெத்தொழிற்குங் குருவுமாகும்
மெய்யப்பாசொல்விவைத்தேன் வசியமுதலெட்டும்
விருதுபெற்றதயிலத்தை தொட்டுபோடு
பொய்யப்பாசொல்லவில்லை தொழில்களெல்லாம்
போக்கோடேதயிலமது மூப்பூவாகுங்
கையப்பாவுதவுமல்லோ சகலசித்துங்
காட்டுமடாமஷ்டதிக்கும் வெல்லலாமே. 367

வசியத் தைலம்

வெல்லுவேனின்னமொரு தயிலங்கேளு
விருதுபெறவசியத்தின் போக்குக்கெல்லாஞ்
சொல்லவேசொல்லுகிறேன் மூன்றுங்கெற்பஞ்
சென்றெடுப்பா ராதித்தவாரந்தன்னிற்
சொல்வேன்மனமடக்கி யின்னங்கேளு
சோம்பாதேமுதற்றாந்த னெடுத்துவந்து
வல்லமைகட்செய்யாதே சிவந்ததாக
மைந்தனேகொண்டுவந்து சொல்லக்கேளே. 368

கேளடாமுன்போலே வொடியாய்ச்செய்து
கிருபைபெறவேணுமென்று வுரலுற்றுக்கு
சூளடா * வரிதாரஞ் சூடன்கந்தித்
நூக்கடாபூரமுடன் வகையொன்றுக்குத்
தூளடாபலமொன்று பொடித்துப்போட்டு
துப்புறவாயத்திப்பாற் படியுமூன்று
நாளடாவிட்டுநீ கலகித்தியால்
நலமாகவெரித்துவிட வகையைக்கேளே. 369

வகையென்னசொல்லுகிறேன் கண்டிற்றுனல்
வருகுமடாதயிலமது வெண்ணெய்போலே

* அரிதாரம் - தாளகம்

துகையென்னயெண்ணெய்நீ வடித்துக்கொண்டு
சொல்லுவேன்கடுகுதனை மெழுகாய்ப்பண்ணி
பகையென்னவென்றவர்க ளுன்னைக்கண்டாற்
பணிவார்கள்தைலத்தின் பாசத்தாலே
தகையொன்றுமில்லையடா பீங்கானுள்ளே
தைலமதுவிட்டுநீ யப்பால்வையே. 370

வைத்துமேவசியமென்ற தயிலமாச்சு
வாங்கியந்தமெழுகதனைச் சிமிளில்வைத்து
வைத்துமேவால்வளையஞ் சீலைசெய்து
வளமாகவோரிடத்தில் ரண்டையுந்தான்
வைத்துமேபோகாதே யின்னங்கேளு
வாகாதவஞ்சனத்துக் காதிவிந்து
வைத்துமேசெய்வதற்கு விவரமெல்லா
மைந்தனேசெய்தொழிலும் புனிதமாமே. 371

## அஞ்சனத் தயிலம்

புனிதமென்றயாறுக்குள் விருந்துதானற்
போக்கென்னநாலாவ தப்பாகேளு
கெணிதமென்றசுக்கிர வாரந்தன்னிற்
கேளடாகொண்டுவந்து பொடியாய்ச்செய்து
அணிதமென்றுநினையாதே சொல்லக்கேளு
அப்பனேபூநீறு கொஞ்சம்போட்டு
கணிதமாம்கிரும்பதிலே பலமிரண்டு
கட்டாகநறுக்கியே கூடப்போடே. 372

போடவேசாதிக்காய் பலமிரண்டு
பொடியாகத்தூட்பண்ணி யதிலேபோட்டு
நாடவேகல்லுரலின் மைபோலாட்டு
நளிதமாய்ப்பாண்டத்தி லிட்டுகேளு
தேடவேயமுரியது படிதானலு
திறமாகக்கலக்கியதை யடுப்பில்வைத்து
தோடவேயெட்டியுட விறகாற்றீயைத்
தொந்தமாகீயெறித் தெண்ணெய்வாங்கே. 373

வாங்கியேபீங்கானி லடைத்துக்கொண்டு
வாய்மூடியோரிடத்தில் வைத்துநீயுங்

தூக்கியேதிரியாதே யஞ்சனத்துக்காதி
சொல்லிவைத்தேனின்னமுநான் சொல்லக்கேளு
தாங்கியேமாரணத்தின் றயிலந்தன்னை
தாயெனக்குச்சொன்னபடி சாற்றினேன்யா
ஞேங்கிலய * முதற்றரந்தான் பூரணமாகு
லுசத்தியடாமெத்தநன் றுரைக்கக்கேளே. 374

## மாரணத் தயிலம்

உரைக்கவேசொல்லுகிறேன் திறமேதென்னி
லுயர்த்தியடாகறுப்புவன்ன மெத்தநன்று
திரக்கவேசனிவாரந் தன்னிலேதான்
திறமாகவெடுத்துவந்து சொல்லக்கேளு
மறைக்கவேயில்லையடா நஞ்சோடொக்க
மைந்தனேயெடுத்துவந்து பொடியாய்ச்செய்து
தறைக்கவேவேம்பினுட பருப்பைக்கேளு
தனிரண்டுபலமதிலே கூடதாக்கே. 375

தாக்கியேவேப்பிலையை யுரலிற்போட்டு
தாக்கடாதவிடுபோ யிடித்துக்கொண்டு
தேக்கியேபடியெட் டமுரிதன்னிற்
றிறம்பெறவேகலந்தியப்பூ நீறும்போட்டு
தாக்கியேயிறுத்திடுவாய்த் தெளிவைநீயுஞ்
சாற்றினேன்படிநாலை பாண்டத்துள்ளே
வாக்கிலேசொன்னதென் றெண்ணவேண்டா
மைந்தனேகூடவிட் டடுப்பில்வையே. 376

வைத்துமேவேம்பினுட விறகுத்தீயால்
வகையாகத்தானெரிப்பாய்க் கமலம்போலும்
ஊத்துமேயெண்ணெயது வருகும்நேரம்
உத்தமனேவடித்துநீ பீங்கானுள்ளே
காத்துமேமாரனத்தின் றயிலந்தன்னை
காற்றடங்கவிட்டுநீ மூடிப்போடு
வேத்துமேயெதிராளி தலைகளெல்லாம்
விருதுபெற்றதயிலமது விளம்பொண்ணாதே. 377

* முதற்றரம் - கருசீலை.

ஒண்ணனகருவையின் றயிலந்தன்னை
  வுரைத்துவிட்டேன்சித்தருட மறப்பையெல்லாங்
கண்ணனதயிலமது சொன்னதாலே
  கண்டித்தார்கும்பமுனி யென்னைத்தானும்
பொன்னனதயிலமதைச் சொன்னயானாற்
  போகுமடாவுன்தேகம் பொடிமண்ணகச்
சொன்னலுங்தெரியாதே சாபந்தானும்
  திடருமடாவுன்குலத்தைச் சுற்றுந்தானே. 378

தானென்றசாபத்தாற் பயந்துசித்தர்
  தானொளித்தார்குகைதனிலே வெளிவிடாமற்
றேனென்றவமுர்தமடா யிந்தநூலுஞ்
  செப்பினேனென்குருவின் வாக்குகேட்டு
நானென்றகும்பமுனி யெனக்குவாசான்
  நானதொருநந்தியுமே யெனக்குப்பாட்டன்
வானென்றபுசண்டருமே மென்தகப்பன்
  வாக்கருளிச்செய்ததிலே வசனித்தேனே. 379

வசனித்தவன்னூற்றி கனுபானங்கள்
  மைந்தனென்றபிள்ளைக்கு தெரியவென்று
வசனித்தவார்த்தையொன்றுஞ் சொல்லவில்லை
  மகத்தானதொழில்களெல்லாம் வெளியாய்ச்சொன்னேன்
வசனித்தசித்தருடன் தனயவானும்
  வமலனாருட்பெற்று சொன்னேனப்பா
வசனித்தவாயியைத்தான் பூசைபண்ணு
  வகுத்துரைப்பாளட்டகமை மெட்டுத்தானே. 380

## அஷ்டகன்மச் சக்கரம்

தானென்றவட்டகன்ம மெட்டுந்தான்
  சாத்துகிறேன்சக்கரத்தின் தொழிலைக்கேளும்
வானென்றவாறுவறை நேரேகீறி
  வழக்கமாயாருவறை குறுக்கேகீறி
தேனென்றவிருபத்தஞ் சறையினுள்ளே
  சேர்த்திடுநீயக்ஷரத்தைத் தீர்க்கமாக
வானென்ற-வய-நமசி-யென்றுமாறு
  வளமைபெறமறுபுவீட்டிற் சொல்லக்கேளே. 381

கேளடா-மசி-வயந-வென்றுதானுங்
 கிருபைபெற-ந-ம-சி-வ-வென்றுபோடு
வாளடாவதின்கீழே-சிவயநம-வென்று
 மைந்தனேயடுக்கடுக்காய் நமசிவயமென்று
கேளடாவாராது யன்பத்தொன்றுங்
 கூறுவேன்வழக்கமதை யின்னங்கேளு
பாளடாபோகாமல் வகாரந்தன்னிற்
 பாங்குபெறவெட்டும்நீ பாருபாரே. 382

பாரப்பாஅகாரமத்தின் முப்பதாகும்
 பாடுவன்நகாரமதி லொன்றுபோடு
சேரப்பாமகாரமதி லஞ்சுபோடு
 தீர்க்கமடாசிகாரமதி லேழும்போடு
பாரப்பாயிப்படியே லக்கந்தன்னை
 மறையுநேனைந்தெழுத்து மங்கேநிற்கும்
நேரப்பாயைந்தெழுத்தி லனந்தலக்கம்
 நினைவாகவிட்டுநீ பூசைபண்ணே. 383

பண்ணவேயிருபத் தஞ்சுவீடு
 பாங்குபெறவோமென்னு சுத்திக்கட்டி
கண்ணவேபதின்மூன்றும் வீட்டிலேதான்
 கருத்துவைத்துமுக்கோண மதின்மேல்வட்டம்
உண்ணவேமகாரமதைக் கீழேசாத்தி
 யுறுதிபெறஅகாரமதை நிறுத்திப்போடு
சுண்ணவேயகாரமதின் முடிமேற்றானு
 மீட்டுவாயஃகெனவு மெழுத்தும்பாரே. 384

பார்க்கவேமுக்கோண வலபாகத்திற்
 பாவிப்பாய்கிலியுமென்ற வெழுத்தைநீயுஞ்
சேர்க்கவேயிடபக்கஞ் சொல்லக்கேளு
 சென்றிடுநீயரிசியென்றே யெழுத்தையப்பா
யார்க்குமேசொல்லாதே வாலதீட்சை
 யப்பனேசிவதீக்ஷை யதிலேயாச்சி
கார்க்கவேமேருவினு பூசைதானுங்
 காட்டினேன்சக்கரத்தி லின்னங்கேளே. 385

இன்னமுந்தான்சொல்லுகிறேன் வறைகட்டோறு
 மீட்டிடுவாய்சூலமது யிடைவிடாமற்

சொன்னதொருசூலத்தி னுச்சிமீதிற்
சூட்டடாஸ்ரீயென்று சுத்திக்கட்டி
கன்னவேயதின்மேலே மூன்றுவறைபோட்டு
கண்டிடுநீவாசலது நான்கும்விட்டு
முண்ணவேவாசலிலே தேவதைகொல்லே
வோசத்தியட்ட சக்கரத்தி னுண்மைதானே. 386

உண்மையென்றுசொல்லிவைத்தே னின்னங்கேளு
உறுதிபெற்றதேன்வாசற் கணபதியின்பீசந்
தண்மைபெறவேணுமென்று யிட்டுநீயுந்
தாக்கடாமேல்வாசற் கந்தன்பீசம்
நண்மையென்றுபோட்டுவிடு நீயாமென்று
நாட்டிடுவாய்வடவாசற் றார்க்கைபீசம்
பண்மையென்றுளம்போட்டு சொல்லக்கேளு
பாக்கவேகீழ்வாசல் வயிரவனைபோடே. 387

போடுநீஷீஓப் யென்றுபோடுநீ
புகழ்பெறவேசிதம்பரமுந் தேருபூசை
ஆடுவாயொன்றுகச் சொல்லிவைத்தே
ணுத்தாளுமப்பனுமோ மந்தவிஞ்சை
தேடுவான்கோடியி லொருவனுண்டு
தேசத்தின்மானிடரோ செய்யப்போறுர்
வாடுவார்தேவரெல்லாம் பூசைசெய்ய
மாட்டாமல்மதிமயங்கி நின்றுர்பாரே. 388

பாருநீவந் நூற்றி நாலுக்குள்ளே
பாடிவைத்தேன்சக்கரங்க ளொளிப்பில்லாமற்
சேருநீசக்கரத்தைப் போதஞ்செய்யத்
தீர்க்கமாயொருவருந்தான் சொல்லமாட்டார்
சாருநீசக்கரத்தைப் பூசைசெய்து
சாற்றிஞலட்டசித்துங் கைக்குள்ளாகும்
வேருநீயெண்ணுதே முன்போற்பூசை
விசிதமாய்ச்செய்துவிட வெல்லாஞ்சித்தே. 389

சிற்றுனசக்கரத்தை முன்னேபூசி
தீர்க்கமடாலட்சமுரு செபித்தாயானல்
சற்றுனதேவர்முதற் கணங்கட்சூழுந்
தோன்றுவாருத்திரனுஞ் சோதிகூடம்

பற்றுனபத்தனென்று மனதிற்கொண்டு
பயந்துனக்குச்சொல்லிவைத் துபதேசிப்பார்
முற்றுனவஷ்டசித்து துறைகளெல்லா
மூர்க்கமாய்ச்சொல்லிவைப்பா ரின்னங்கேளே. 390

## வசிகரத்தின் றிலர்தம்

கேளப்பாசிதம்பரசக்கரத்தைப் பூசைசெய்து
கிருபைபெற்றுபயிரவன்றன் தியானத்தாலே
சூளப்பாயட்டசித்து மெட்டுமாடச்
சொல்லுகிறேன்வசிகரத்திற் றிலர்தந்தன்னை
வாளப்பாகஸ்தூரி மஞ்சளோடு
மக்களேமாமஞ்சட் கிழங்குமஞ்சள்
நாளப்பாசந்தனம்பூரம் வெள்ளுரமாகும்
நாட்டுவாய்ப்புனுகுடனே திகைப்பூடாமே. 391

பூடானகுங்குமப்பூ கோரோசனையுங்கூட்டி
போக்கோடேமுப்பூவின் தயிலமாட்டித்
தேடானவித்திலே கழஞ்சுவிட்டுத்
திறம்பெறவேசமனுகக் கூட்டியாட்டி
காடானவிருட்சமுதன் மலைகளெல்லாங்
காணுமுன்னைவணங்குமடாத் திலர்தப்போக்கு
சூடானசூடெழும்பி மறைக்கும்போது
சுருதிபெறவழித்துநீ சிமிழில்வையே. 392

வைய்யப்பாபீங்கானிற் பரணிதன்னில்
வைத்துமேமோகனியைத் தியானஞ்செய்து
மெய்யப்பாசொல்லுகிறேன் சுடலைநீறை
மெழுகமயாய்தானெடுத்து யிலைமேல்வைத்து
கையப்பாகொண்டெழுது முக்கோணத்தை
கட்டானவதினடுவே சிகாரம்போடு
செய்யப்பாயதிநடுவே வட்டம்போடு
திறம்பெறவேசூலமதிற் செலுத்திடாயே. 393

செலுத்தியேயோரிடத்தில் வைத்துக்கொண்டு
தீர்க்கமாயந்திடத்தை சுத்திபண்ணி
அலுத்துநீபோகாதே சக்கரத்தைவைத்து
யதிநடுவேசிமிழ்வைத்துப் பூசைபண்ணி

வலுத்துமேபோச்சுதடா திலர்தவாடை
மைந்தனேவடைபருப்பு யவலுந்தேங்காய்
பெலத்துமேபோகவென்று 1 பானம்வைத்துப்
பெருமையாய்க்கூவிளம் பத்திரியுஞ்சாத்தே. 394

## மோகினி மந்திரம்

சாத்தியேதீபமொடு தூபங்காட்டி
சதிரானமந்திரத்தைச் சொல்லக்கேளும்
போத்தியே-ஹ்ரீஓம்வசியமோகினி வாதாவருகவென்று
பூரிப்பாயாயிரத் தைந்நூறுந்தான்
மாத்தியேமோகினியுன் வசமதாகு
மப்பனேவசிகரத்துக் காதியாதி
வாத்தியேயிப்படிநீ பூசைசெய்து
மைந்தனேதிலர்தமதை நெற்றிற்போடே. 395

போடவேஜெகமெல்லாம் வசியமாகும்
பூதலத்திலரசரெல்லா முன்னைக்கண்டாற்
வேடவேயுனக்கடிமை யானேயென்றுற்
திரும்பவுமேயுன்னிடத்தி லடக்கமாகி
நாடவேபெண்களெல்லா முன்னைக்கண்டா
ளுய்கணுமென்றுசொல்லிக் காலில்வீழ்வார்
ஆடவேதேவதைகள் வசியமாகு
மப்பனேவுனக்கீடு யார்தான்காணே. 396

காணவேயின்னமொரு வசியங்கேளு
கருவானதிகைப்பூடு பூசிப்பார்த்து
தோணவே 2 கையான்பேர் விஷ்ணுமூலி
சொல்லுவேன்வெள்ளையதாய்ப் பிடுங்கிவந்து
நாணவேபனிதாங்கி தாங்கிமூலிவேரும்
நன்றாகக்கலக்கியே கல்வத்திட்டு
யாணவேவுன்னுடை யாணவமாம்விந்து
யப்பனேகழஞ்சுயிடை சமனாய்க்கொள்ளே. 397

கொள்ளவேதானரைப்பாய் முந்தயிலத்தாலே
கூட்டியேசிமிழ்தனிலே வைத்துக்கொண்டு

1 பானம் - கள். 2 கையான் - கரலாங்கண்ணி.

வள்ளவேமுன்போலே மோகினியைப்பூசி
வப்பனேசெயமாக வசிலம்நூறு
மெள்ளவேதானடுத்துப் புருவமைய
விதித்தபடியிட்டிடவே யென்னசொல்வேன்
தள்ளவேசமர்க்களத்தி னடப்பாயாளுர்
றண்மையாய்சரணமென்று விழுவார்பாரே. 398

வசிய வாடை.

விழுகவேஜெகமேழும் வசியமாகும்
விருதுபெத்தவாடையிது சொல்லக்கேளு
நழுகவேவேண்டாங்காண் 1 நீலிவேறும்
நாயுருவிவேருடனே 2 சூரிவேரும்
தழுகவேவேணுமென்ருல் விஷ்ணுமூலி
தானெடுப்பாய்சந்தணமும் ஜாதிக்காயும்
தொழுகவேகஸ்தூரி மஞ்சளோடுங்
துப்பளவாய் 3 கூகைநீர் தாக்குதாக்கே. 399

தாக்கவேகூடனொடு சாம்பிராணியேலங்
தாக்கவேனறத்தைமுதற் சோம்புதானு
மாக்கவேமரமஞ்சட் சாருமஞ்சள்
மைந்தனேதானெடுப்பாய் கஸ்தூரிவீதம்
பார்க்கவேபத்திரியு மரசதானும்
பக்குவமாய்மனிதரோ காணப்போருர்
சேர்க்கவேபஞ்சிலைகிழங் குடனேபட்டை
திறமான 4 சாந்துபட்டை கோஷ்டங்கூட்டே. 400

கூட்டடாநன்றுக கையொன்றுக்கு
கொன்றுநீசரியிடையா யெடுத்துக்கொள்ளு
நாட்டடாகல்லுரலி லிட்டுத்தாக்கி
நன்றுகவேயிடித்து வடிபிட்டேதான்
சூட்டடாபீங்கானில் வைத்துக்கொண்டு
சொல்லுகிறேன்வெள்ளுநாமும் புழுகுங்கூட்டி
ஊட்டடாசிலையிலே புட்டுபோலே
ஓகோகோகூட்டிவைத் துண்மைகேளே. 401

1 நீலி - அவுரி. 2 சூரி - முதக்குரை-நத்தைச்சூரி.
3 கூகைநீர்-காட்டெருமைப்பால்-கிழங்குதண்ணீர்
4 சாந்துபட்டை-வாவனைபட்டை.

## ஏழாம் பிண்டம்

கேளடாபிண்டமது யேழாந்திங்கட்
கிருபைபெறகொண்டுவந்து சொல்லக்கேளு
சூளடாபாண்டமதி லிட்டுநீயுஞ்
சொல்லுவேனத்திப்பால் கள்ளும்வாரு
பாளடாபோகாமற் படிதான்ரண்டு
பாண்டமதிலிட்டுநீ யப்பாற்கேளு
நாளடா * பின்றொடரி சமூலம்வாங்கி
நன்றாகப்பலம்பத்து நொருக்கிப்போடே. 402

போட்டுமேலேடுசட்டி யதின்மேற்கேளு
போக்கோடேமுன்பொடியைப் பரப்பிக்கொண்டு
நாட்டுமேசட்டிதனைக் கவிழ்த்துமூடி
நலமாகச்சீலைமண் வலுவாய்ச்செய்து
சூட்டுமேயடுப்பினிலே வைத்துமூட்டு
சொல்லுவேனனவறையின் விறகுதீயாற்
காட்டுமேகலம்போ லெரிநேற்பாகங்
கழண்டுருகிப்போகுமடா கண்டுபாரே. 403

பாரப்பாவாசமது மேலேபட்டாற்
பத்தியேசுத்துமடா யிருந்தபேரை
நேரப்பாகாத்தோட்டம் பார்த்துநில்லு
நிதிபெறவேவத்தியது சுடரைவீசுஞ்
சேரப்பாபதமொன்று யிறக்கிநீயுந்
திறமைபெறவாறைவிட்டு பிட்டைவாங்கிக்
காரப்பாநிழலுலர்த்திப் பீங்கான்தன்னிற்
கடக்கவேவைத்துநீ யப்பாற்கேளே. 404

## வைரவர்த் தியானம்

கேளடாமுன்தயிலங் கருவுங்கூட்டி
சீர்த்திபெறமோகினியின் சக்கரத்தின்முன்னே
சூளடாவைத்துநீ பூசைபண்ணி
சொல்லுவேன்வைரவர்தன் தியானத்தாலே
வாளடா-அரி-ஓம் மவுனமந்திரம்
வயிரவாநமவா வருகவென்று

---

* பின்றொடரி-திகைப் பூண்டு.

...விட்ட வுருத்தானூறுங்
...கடாமோகினி மந்திரஞ்சேர்த்தே. 405

சேத்துநீயோதிடவே யென்னசொல்வேன்
ஜெகமெல்லாமயங்குமடா யிந்தவாடை
பாத்துமேபத்திரமாய்ப் பூசைசெய்து
பரிமளிக்குங்காத்தோட்டந் தன்னிலேதான்
காத்துமேபின்னையொன்று வாரக்கொட்டாது
கனமோகஞ்செய்யுமடா யென்னசொல்வேன்
வார்த்துமேதன்வீட்டிற் சொல்லும்போது
வப்பனே * நிம்பெண்ணெய் பூசிச்செல்லே. 406

செல்லவேவாடையது முறிந்துபோகுந்
தீர்க்கமடாமரப்பையிட்டு முழுகிப்போடு
வெல்லுமேதேவர்முதற் கணங்களெல்லாம்
மிகவணங்கியுந்தனுக்கு நிற்கும்பாரு
வல்லமையாய்பேசாதே வாடைப்போக்கை
மனதில்வைத்துப்பரவசியம் பாருபாரு
கல்லுமேகரையுமடா விந்தவாடை
கண்காணுதொருவருக்குங் காட்டொண்ணாதே. 407

## தம்பனம்

காட்டாதேதம்பனத்தைச் சொல்லக்கேளு
கருவானவமுக்குரு சங்கம்வேருஞ்
சூட்டானவால்விழுதுஞ் சூரிவேருஞ்
சொல்லுவேன்கீழ்க்காயின் நெல்லிவேரும்
நாட்டடாநன்னாரி வெண்கொழிஞ்சி
நன்மையென்றகுண்டுமணி வெள்ளையாகுங்
கூட்டடாகிலுகிலுப்பை வேருமாகுங்
கொண்டெடுப்பாவாதியென்ற வாரந்தானே. 408

தானென்றவாரதிற் பெலியுமிட்டு
தாக்கடாநிருவாணத் தூபங்கொண்டு
கோனென்றமூலியெல்லாம் வேரராமற்
கொண்டுவந்துசட்டிதனிற் கருக்கிக்கொண்டு

---

* நிம்பெண்ணெய் - வேப்பெண்ணெய்.

ஊனென்றதேசியுட கபாலத்தை
உத்தமனேமண்ணுளியின் பாம்பின்வாலுந்
தேனென்றவேரெல்லாம் வகையொன்றுக்கு
செப்புவேனெல்லாம்வகை யொன்றுதானே. 409

ஒன்றானவேரெல்லாம் நறுக்கிப்பின்பு
உரைக்கிறேன்கருவகையை யின்னங்கேளு
நன்றானவுதிரமுடன் வாலுநேராத
நாட்டடாகழஞ்சியிடை வரைதானப்பா
கன்றானகல்வமதி விட்டுக்கொண்டு
கழிதியரைமுப்பூவின் தயிலத்தாலே
மன்றான * வெண்மதியின் சிமிழிலேதான்
மைந்தனேதழித்திடுநீ வகையைக்கேளே. 410

## கபால வயிரவன் வசியம்

வகையென்னசொல்லுகிறேன் கபாலருத்ரன்
வயிரவர்தன்சபதத்தைநீ மாட்டுமாட்டு
தகையென்னஹரிஓம் கபாலபிரவாகம்
தயவாவாவருகவருக வென்றுசொல்லி
நகைபுரியும்வயிரவத்தின் தியான நூறும்
நாட்டியேபுருவமையந் திலர்தப்போடு
பகையொன்றுமில்லையடா வுனக்குத்தானும்
பருவமிதிற்சொல்லுகிறேன் பாகங்கேளே. 411

பாகமென்னவாயுதங்க ளெல்லாந்தப்பும்
பார்க்கயிலேயிரும்புவெட்டு குண்டேறாது
தாகமென்னபீரங்கி வெடித்துப்போகும்
சமுசியங்களில்லையடா தெட்டாறது
போகமென்னவிந்துவதை யிரங்கொட்டாது
போக்கோடேபூதமல டங்கிப்போகுங்
காகமொடுபட்சிகளுங் கட்டுண்டுநிற்கும்
கடுவாயுமிருகமுத லங்குந்தானே. 412

## தம்பணச் சக்கர மறைப்பு மை

தானென்றதம்பனத்தின் சக்கரத்தைக்கேளுஞ்
சாத்துவேன்சதுரங்கக் கோணமிட்டு

* வெண்மதி - வெள்ளைச்செம்பு.

மூன்னென்றநடுமையம் ஐயும்போடு
முத்தமனேபூசைபண் ணுறுதியாகுந்
தேனென்றமருப்புமையின் விபரங்கேளு
திறமாகப்பச்சோந்தித் தூளினோடு
கோனென்ற 1 கருந்தேசிப் பித்தினோடு
கூட்டடாகருத்தநிற மட்டைத்தானே. 13

அட்டையென்றசிறுமது மூலங்கூட்டு
வப்பனேகரும்பூனைக் கண்ணிப்பித்து
முட்டையென்றகருங்காக்கை யண்டமொன்று
மூர்க்கமுடனிவையெல்லாங் கல்வத்திட்டு
கொட்டையென்றகருத்தா மணக்கின்வித்து
கூறுவேன்சிவன்வேம்பு சமூலத்தோடு
மட்டையென்றபேய்பீர்க் கினத்தினோடு
மைந்தனேயிவையெல்லாந் தயிலம்வாங்கே. 14

வாங்கியேகல்வத் திட்டுக்கொண்டு
மைந்தனேதானரைப்பாய் தயிலத்தாலே
தாங்கியேமைபோல வாட்டிக்கொண்டு
தானெடுப்பாய்முதற்றிறந்தான் விலக்குச்சீலை
தூங்கியேதிரியாதே வைக்கோலந்தான்
துப்புறவாய்த்தான்கிழித்து மையைப்பூசி
நீங்கியேயிருப்பகலிற் றிரியைப்போட்டு
நிமிரவிடுமுப்பூவின் தயிலந்தானே. 15

தைலமதுவிட்டுநீ தீபமேத்தித்
தான்கவிழ்ந்து 2 கோறைபடா வண்டைவாங்கி
தைலமதுதெரியாமல் மறைப்பதற்கு
சாத்துகிறேன்புல்லா மணக்கின்வித்தை
தைலமதுபோல்பிடித்துத் தயிலந்தன்னை
தானெடுத்துபூட்டிவிடு கபாலவோட்டில்
தைலமதுபோலிரங்கும் மையைவாங்கி
தன்மைபெறமாவிலங்குஞ் சிமிழில்வையே. 416

## உன்மத்தன் வயிரவர் தியானம்

வையப்பாவயிரவத்தின் சக்கரத்தின்முன்னே
வகைசொல்லார்வுன்மத்த வயிரவன்தானப்பா

---

1 கருந்தேசி - கருங்கழுதை. 2 கோறை - மயரில்லா.

மெய்யப்பாசொல்லிவைத்தேன் அரிஓம்வுன்மத்தவயிரவா
வாவாயநமவருக மறையவென்று
செய்யப்பாவுருவதுதான் மூவாயிரத்தெட்டு
செபித்திடவேசிமிருதுதான் மறையும்பாரு
பொய்யப்பாசொல்லவில்லை முன்னுறைத்த
போதமென்னமுப்பூவின் தயிலந்தானே 417

தானை தயிலமையின் புருவமீதிற்
ரூன்தேய்த்துப்பார்த்திடவே சுமிழ்தான்தோற்றும்
பூனைவயிரவற் குள்ளபூசை
உத்தமனேமுடிந்தபின்பு யெடுத்துக்கொண்டு
மானைசிமிழ்தனையும் பதனம்பண்ணி
மைந்தனேமணம்போலே திலர்தம்போட்டு
தேனைவிந்தத்தினுல் விட்டுத்தேய்த்து
திரும்பிபிடுதிலர்தமது செய்கைபாரே. 418

பார்க்கவேயண்டரொடு முனிவரெல்லாம்
பார்த்தாலுமுன்னுருவந் தோணுதப்பா
வேர்க்கவேமானிடரோ காணப்போறூர்
வென்னசொல்வேன் விபரமினிவின்னங்கேளு
சேர்க்கவேமையெடுத்துப் பதனம்பண்ணி
தேவனும்பிராட்டியைநீ மறைத்துப்போடு
கார்க்கவேயவளுடைய பாதந்தன்னிற்
காத்தாக்காற்கனுபானம் முறைப்பான்பாரே. 419

## மறைப்பை நீக்கு மை

பாரேநீயின்னமொரு தொழிலைக்கேளு
பாருலகின்மையொன்று மறைப்பைநீக்க
சேரேநீயாட்சி பித்துங்கண்ணு
தீர்க்கமுடன்புலிநகமும் பூச்சியஞ்சு
வாரேநீநிலக்கூகை கண்ணுங்கூட்டி
மைந்தனேநாதத்தா லாட்டிப்பின்பு
காரேநீபுருவமையந் திலர்தம்போடு
காட்டுமடாவுன்திரேகங் கண்டுபாரே. 420

## அஞ்சனம்

கண்டுமேசொல்லுகிறே னஞ்சனத்தின்போக்கு
காட்டுவேன்தேவாங்குப் பித்துங்கண் ணுங்
கொண்டுமேசெம்போத்தின் கண்ணினோடு
கூறுவேனுந்தைகண் 1 கூகைகண் ணுங்
தண்டுமேகருங்கழுதைக் கண்ணினோடு
தாக்கடாகருங்குருவி கண்ணிரண்டு
முண்டுமேபன்றியுட னேமங்கூட்டி
முஞ்சூறுதூளொக்க கூட்டுகூட்டே. 421

கூட்டவேசெவ்வறணை வாலினோடு
கூனுனசாதிக்காய் கிராம்புதானும்
நாட்டவேரண்டுவகை சரக்கைநீயும்
நலமாகநிறுத்திவிடு விராகனென்று
மாட்டவே 2 மீன்வெட்டி விராகனோடு
மைந்தனேயிவையெல்லாங் கல்வத்திட்டு
வாட்டவேயஞ்சனத்தின் தயிலந்தன்னை
வப்பனேவரைத்துநீ மெழுகாய்ப்பண்ணே. 422

பண்ணியேமுதற்கருவாம் விளக்குச்சிலை
படுத்திடுநீனிறமென்றால் சோதிவண்ணங்
கன்னியுடசீலையிலே வைத்துருட்டி
3 கண்விழுந்தானைக்கண் கட்டிதூரி
யெண்ணியேமுதற்றரந்தா னுகம்வாங்கி
யிதமாகத்தேய்த்துநீ காயப்போடு
சென்னியேகபாலமதிற் றிரியைப்போட்டு
தீர்க்கமாய்முன்தயிலந் தன்னைவாரே. 423

வாத்துமேதீபமிட்டுக் காத்தாடாமல்
மைந்தனேகூடையிட்டு கவிழ்த்துமூடு
பார்த்துமேயந்திடத்தைச் சுத்திபண்ணி
4 பறையனுடசக்கரத்தை வைத்துப்பூசி
காத்துமேபூசைசெய்ய தேவிவாலைக்
கன்னியுடக்கிருபையினு விரங்குமைதாஞ்

1 கூகை - கோட்டான். 2 மீன்வெட்டி - சுரு.
3 கண்விழுந்தானைசட்டி - கண்விட்டசட்டி. 4 பறையன் - தைரவன்.

சேத்துமேபரணிதனின் மையைவாங்கிச்
செப்புவேனுகமென்ற சிமிழில்வையே. 424

## பிரசண்டம் வைரவத் தியானம்

வைத்துமேவடுகனுட சக்கரத்தின்முன்னே
மனதுவைத்துதீர்க்கமாய் பூசைசெய்து
தைத்துமே-ஹரி-ஃ-பிரசண்டவைரவாய்-நம
வா-வா-வருக வென்றுநீயும்
வைத்துமேபோகாதே மூவாயிரமுமோது
மப்பனேபிரசண்ட வைரவனுந்தோணும்
வைத்துமேமனமடங்கித் தெண்டஞ்செய்து
வந்தகுருநாதனையும் பணிந்துபோற்றே. 425

போற்றியேமைதனை யெடுத்துவைத்துப்
பூட்டுவாய்முப்பூவின் தயிலஞ்சேர்த்து
நாற்றிசையுந்தானறிய மையெடுத்து
நாட்டடாக்கண்ணுடிச் சில்லிமேலே
தேற்றியேபிரசண்ட வயிரவனைப்போற்றித்
தீர்க்கமடாமைதானு மென்னசொல்வேன்
சாற்றியேமையதனைத் தீற்றும்போதே
தரணிதனில்புதைகளெல்லாங் காணுந்தானே. 426

காணவேபுதைகளெல்லாம் பிரண்டமூர்த்தி
காட்டுவாருந்தனுக்குக் கண்ணிற்றானுந்
தோணவேபுதைகளெல்லா மெடுக்கும்போது
சுற்றிநின்றபூதமுதற் கணங்களெல்லாம்
நாணவேபோகுமடா வைரவனைக்கண்டால்
நற் * றேசிக்கொழுப்பிலே தீபமேற்றி
பூணவேவைரவனைச் செபித்தாயானாற்
பிரிந்துமேயோடுமடா வறிந்துபாரே. 427

பாரப்பாதைத்ரவர் மறப்பையெல்லா
பார்க்கலாமஞ்சனத்தின் பார்வையாலே
சேரப்பாசிந்தூரந் திலர்தமையுந்
திறமானமூலிகைகள் காணலாகும்

---

* தேசி - குதிரை.

வாரப்பாவாரிதியி ளொளித்துவைத்து
வழலையென்றவப்புமுதற் நாணலாகும்
நேரப்பாமையினுட போக்கேகண்டால்
நிலைக்குமடாவஷ்டசித்துங் கைச்சூளாமே 428

## மாரணத்தின் சக்கரம்

ஆமப்பாசொல்லுகிறே னின்னங்கேளு
அதிகமென்றமாரணத்தின் போக்குதன்னைத்
தாமப்பா * வயத்தாலே தகடுபண்ணி
சாத்தடாவாறுவரை சரியாய்க்கீறிப்
போமப்பாயிருபத்தஞ் சரையுமாச்சு
போக்கோடேசிவயநமா-வென்றுபோட்டு
வாமப்பாசுற்றியே சூலமிட்டு
வகையாகவிதன்விபர மறிந்துபாரே. 429

பாரியேவரைதோறு மெழுத்தைக்கூட்டி
மைந்தனெமுன்சொன்ன படியேநீயும்
மீரியேசக்கரத்தை யடைத்துக்கொண்டு
மீராதேயெதிராளி பேரைநீயுஞ்
சீரியேவட்சரங்கட் டவித்துப்போட்டு
கேளடாவவனுடைய கருவைநீருங்
கோரியேநீர்க்குழி மலங்கட்டஙநார்
கூட்டவேகருவின்னங் கூறுவேனே. 430

## மாரணத் தயிலம்

கூறுவேன்கரும்பாம்பின் விஷத்திறேடு
கூட்டடாகருநாபிக் கழஞ்சுக்காலம்
வாறவேயங்கோல மதிலேசேரு
வப்பனேமாரணத்தின் தயிலத்தாலே
சேறவேயவன்கருவு மலமுங்கூட்டித்
திரட்டவேதானரைத்துத் தகட்டிற்பூசி
மாறவேமுன்கருவாம் விலக்குச்சிலை
மைந்தனேவைத்துருட்டிச் சொல்லக்கேளே. 431

கேளடாசிவந்ததொரு தரணைக்குள்ளே
சீரியேசக்கரத்தைப் புதைத்துநீயுஞ்

* அயம் - இரும்பு.

சூளடாயிரும்பாலே கம்பிசுத்தித்
  தூக்கியேதலைகீழாச் சொல்லக்கேளு
பாளடாபோகாமற் சரக்கைக்கூட்டிப்
  பரிவாகத்தானெடுத்துச் சொல்லக்கேளு
வாளடாகுச்சியெல்லாம் பொருக்கிக்கொண்டு
  மைந்தனேயோமமோடு வேப்பெண்ணையிட்டே. 432

விட்டுநீயோதிடுவாய்ச் சக்கரத்திநின்று
  விருதுபெற்றமாரணத்தைச் சொல்லியேதான்
தொட்டுநீவாயிரத்தெட் டுருவும்போது
  சொல்லியேயவள்பேரும் செபித்துப்போடு
பட்டுமேமாண்டிடுவா ராரானாலும்
  பறமனல்முடியாது விலக்கவென்றுற்
சுட்டுமேசாம்பலெல்லாம் வாரிக்கொண்டு
  தூற்றடாவவன்குடியுந் தூளாய்ப்போமே. 433

போகுமேதாகமுந்தான் பறந்தாப்போலே
  போக்கோடேகுடிகளெல்லாஞ் செத்துப்போகுஞ்
சாகுமேயவன்குடிக ளாடுமாடுந்
  தானெழுந்தவன்குடியுஞ் சேதமாகும்
வேகுமேயவன்குடிக ளுள்ளதெல்லாம்
  வெகுகோடிபாவமிது சொல்லிவிட்டேன்
யாகுமேதம்பணத்தைச் செபித்தாயானா
  லப்பனேவந்தமட்டு நிற்குந்தானே. 434

உச்சாடனம்

தானென்றஉச்சாடனத்தைச் சொல்லக்கேளு
  தானிடுவாய்முன்போலேச் சக்கரத்தைநீயும்
பானென்ற-மசியநம-வென்றுபோடு
  பக்குவமாய்நடுவணையைப் பிடித்துமாறு
ஊனென்றவறைகளெல்லாஞ் சூலமிட்டு
  வுசரவிருவரைபோட்டுக் கொட்டையாக்கி
மானென்றவாசல்வழி தேவதைகாணட்டி
  மைந்தனேலக்கத்தை வறைந்திடாயே. 435

வறைந்துமேமெழுகுடனே கோரோசினையுங்கூட்டி
  மார்க்கமென்னமுப்பூவின் றயிலத்தாலே

உறைந்துமேமீயறைத்துப் பூசிப்போடு
உண்மையாய்த்தாமறையின் பூவின்வைத்துக்
கறைந்துமேகனமுருகித் தியானஞ்செய்நீ
காட்டேரிப்பூதமுதற் கைக்குள்ளாகும்
பறந்துமேதேவதைகட் பேசும்பாரு
பார்க்கவேசொல்லுகிறே னின்னங்கேளே. 436

கேளடாவாக்கிருஷ்ணஞ் சொல்லக்கேளு
கீறடாமுன்போலேசக்கரத்தைநீயுந்
தாளடா-வ-ய-ந-மசி யென்றுமாரித்
தாக்கடாலக்கத்தைச் சரியாய்நீயுங்
கேளடாவராம லாதிவாரங்
கொடுமைபெறச்சக்கரத்தை வைத்துநீயுஞ்
சாளடாகுங்குமத்தை நிறையச்சாத்திச்
சார்வாகச்செவ்வல்லிப் பூவும்போடே. 437

போடவேமுன்சொன்ன தயிலத்தாலே
பூட்டியேகற்பூரங் கறைத்துக்கொண்டு
நாடவேபின்னாலே பூசிப்போடு
நலமாகச்செம்பருத்தம் பூமேல்வைத்து
வாடவேவேண்டாநீ முன்னேசொன்ன
வாய்த்திட்ட.மந்திரத்தை தியானஞ்செய்நீ
சாடவேவாயிரத்தெட் டுருத்தான்போடச்
சமுசியங்களில்லையடா தப்பாவாரே. 438

வாருகேள்பூமியி லுள்ளதேவர்
வார்த்தையிட்டா லுன்னேவற் கேழ்க்கும்பாரு
பேருகேளுலகமெல்லாம் பிரகாசிக்கும்
பெருமைபெற்றராஜரெல்லாம் வணங்குவார்கள்
வேருகேளுன்னுடைய வில்லந்தன்னில்
வேண்டினவர்பேரையிட்டு தியானஞ்செய்தால்
நேருகேளுன்னிடத்தில் வருகுவார்பார்
நீயறிந்தமாயத்திற் சிக்கொண்ணாதே. 439

சிக்கினால்பாவ முந்தனுக்குந்
தேவியுமேசபித்திடுவாள் நாசமாகும்
வெக்கவேயெந்தனுக்குப் பாவமாகும்
விருதுபெற்றசித்தனென்ற பெருமைபோகுந்

மைதக்கவேயிந் நூலிற் சாபம்போட்டேன்
தான்பயந்துசித்தரெல்லா மயங்கினுர்காண்
மெய்ச்சவேசொல்லிவந்தே னிந்த நூலில்
வெளிவிட்டாலுந்தனுக்குச் சாபந்தானே. 440

தானென்றசாபமது சுத்திக்கொண்டு
சண்ணுமடாஉன்குலத்தைத் தடையில்லாமல்
ஊனென்றசாபமது தொடர்ந்துமென்று
லொருநாளும்பலியாது வுண்மைசொன்னேன்
நானென்றவிழியாட்ட னெனக்குச்சொல்ல
நன்றாகசாஸ்திரத்தின் மரைப்பையெல்லாங்
கோனென்றகுருவருளாற் கண்டேன்யானுங்
கூறினேனேன்னூற் றிறமைதானே. 441

## பேதத்தின் பொடி

தானென்றபேதத்தின் பொடியைச்சொல்வேன்
தனித்திருந்தபச்சோந்தி மூலம்வாங்கி
மானென்றபின்மரிந்த வண்டதப்பா
மைந்தனே தலையதனை நறுக்கிக்கொண்டு
ஊனென்றசெய்யானுங் குழிகறியின்மண்டை
யுத்தமனேவலியனுட தேசிபிச்சி
வானென்றவாந்தையுடன் கடிநாய்மண்டை
மார்க்கமென்றகொம்பினந்த மந்தியாமே. 442

ஆமேதானிதனுடைய மண்டையோடு
வப்பனே 1 மதிமயக்கி 2 யாகாயமூலி
போமேதான்புளியன்மேற் புல்லூரியோடு
போர்கோடே 3 பின்துடரி 4 பூனைமூலி
வாகுமேயிருதலையின் மணியினோடு
மைந்தனேசுழல்வண்டு வகையாய்க்கூட்டி
யேகுமேயிவையெல்லாஞ் சமனாய்க்கொண்டு
இடித்துமேதூட்பண்ணி வைத்திடாயே. 443

## மோகினி மந்திரம்

வைத்துமேமோகினி மந்திரத்தைக்கேளு
வகையாக-ஹரி-ஓம்-சர்வமோகினி-வா-வாவென்னே
வைத்துமேசொல்லிவிட்டேன் லட்சம்போடு
வேதாந்தமோகினிகை வசமாயாவாள்

---

1 மதிமயக்கி - திகைப்பூண்டு. 2 ஆகாயமூலி - ஆகாயத்தாமரை.
3 பின்துடரி - ஆடையோட்டி. 4 பூனைமூலி - குப்பைமேனி.

வைத்துமேபூசைகளுந் திறமாய்செய்து
வகையாகவாலாத்தி யேற்றிபின்பு
வைத்துமேகொண்டுநீ பொடியைவாரி
வையடாபேச்சுரையின் குடுக்கைதானே. 444

தானென்றபொடியைநீ பதனம்பண்ணித்
தானெடுத்துப்பணவிடைதா னிகத்தில்வைத்து
ஊனென்றமனிதரு தூலமேலே
வூமையைப்போல்யாவருந்தா னுன்பின்னாலே
நானென்மதிகெட்டு வருவார்பாரு
நன்றாகச்சொல்லிவைத்தே னிந்தநூலில்
வானென்றபட்சியொடு மிருகமெல்லாம்
வந்திடுமுன்பிறகே மைந்தாபாரே. 445

பார்க்கவேசீவசெந்தைப் பேதியாதே
பாவம்வருமதனாலே தோஷத்தோடே
மேர்க்கவேயென்தாயார் பேதனமேசெய்வா
ளென்னசொல்வேன்பின்னாலே வருவாளப்பா
சேர்க்கவேயவளைநீ தொடர்ந்துகேட்டாற்
றீர்க்கமாயுந்தனுக்குத் தற்பமீவாள்
கார்க்கவேயவள்மதத்தி னின்றாயானால்
கன்னிகையாளுந்தனுக்குக் கருச்சொல்வாளே. 446

## பெண்ணீடு மாணீடு

கருவாகபோக்கென்று சொல்லக்கேளு
காட்டுவேனிடுமருந்து சுகவடில்லாமல்
உருவானபொற்கையன் விரையனோடு
வோதுவேணிவிரலி வித்துக்கூட்டி
அருவானவீப்புலியு மவுரிவேரு
மப்பனேபுல்லா மணக்கின்வேருந்
திருவாகைகுழியானைச் சுழல்வண்டோடு
தீர்க்கமாயாவரையின் பட்டைகூட்டே. 447

கூட்டியேயவளுடை சிறுநீராலே
குளிகைபெறத்தானுருட்டி வைத்துக்கொண்டு
நாட்டியேயவளுடைய விலகுநாளில்
நன்றாகத்துணிண்முடிந்து நாதம்வாயில்
ஊட்டியேமூன்றுநாள் வழித்துக்கொண்டு
வுறுதிபெறத்தானெடுத்து சொல்லக்கேளு
வாட்டியேபுருடனுக்கு நெய்பிலேதான்
மைந்தனேவுண்ணெயிலே நாட்டுவாயே. 448

நாட்டவேயவளடிமை யாகிப்போவான்
நன்றாகத்தீருகிற மருந்தைகேளு
வாட்டவே * கூழ்ப்பாண்டக்காய் நறுக்கிக்கொண்டு
வப்பனேதேங்காய்ப்பால் விட்டுகாச்சி
கூட்டவேமூன்றுநாட் டின்றுயானாற்
குலேந்துவிடுமருந்தினிட வேகந்தானும்
வாட்டவேயின்னமொரு வசியங்கேளு
மைந்தனேதலேகருளி வேரைவாங்கே. 449

## புருஷருக்கு ஸ்திரீ வசியம்

வாங்கியேவுனக்காக பெண்களோடு
மாதரந்தசிலேதனில் வைத்துருட்டி
பாங்கியேபாபாயி வா-வா-வென்று
பண்பாகவாயிரத்தெட் டுருத்தான்போட்டு
தூங்கியேதிரியாதே யனலில்வாட்ட
சுழன்றேடியுன்னிடத்தில் வருவாள்பாரு
நீங்கியேயின்னமொன்று சொல்லக்கேளு
நினேவாகவலியன்றன் பித்துவாங்கே. 450

பித்துடனேவிந்துமதிற் சேர்த்துக்கொண்டு
பொருமையென்றமங்கையர்க்குக் கொடுத்தாயானல்
சுத்தமுடன்வெற்றிலேயிற் கொடுக்கவேணுஞ்
சொல்லுவேனுன்னடிமை யாகிப்போவாள்
பந்தமுள்ளபுருஷனேயும் வெறுத்துபோவாள்
பரிவானயீடுவகை சொல்லொண்ணுது
சித்தமுடன்யின்னமொரு யிடுமருந்து
செப்பிடுவேன்கோவ்வையுட விரையைவாங்கே. 451

வாங்கியேகழஞ்சியிடை யெடுத்துக்கொண்டு
வகையாகச்சுழல்வண்டு வஞ்சுபோடு
ஏங்கியேபேய்க்கருப்பன் சாற்றிலிட்டு
இறுகநன்றாயரைத்ததனே சொல்லக்கேளு
நீங்கியதோருனதுவிந்து கூடச்சேர்த்து
நேருபடத்தானறைத்துச் சாந்துபோலே
தேங்கியேறியல்பதமா யுலர்த்திக்கொண்டு
தேடியேயனலிட்டுத் திரும்பக்கேளே. 452

கேளப்பாவுன்னிடத்தில் விலேயுமாகில்
கேட்டதெல்லாந்தான்கொடுத் தடிமையாவாள்
சூளப்பாதொட்டாக்கால் வாடிசாற்றை
சொற்பெரியமாதருட விலக்குச்சிலே

---

* கூழ்ப்பாண்டக்காய் - சாம்பற்பூசக்காய்.

வாளப்பாவாங்கிவந் ததிலேபூசி
மைந்தனேநிழலுலர்த்தி வைத்துக்கொண்டு
நாளப்பாதிரியோடே தலைசுரிளியோடு
நலமானவேரைத்தான் வைத்துருட்டே. 453

உருட்டியேமோகினி மந்திரத்தைச்சொல்லி
யோதுவாயுருதானும் வாயிரத்தெட்டு
தெருட்டியேநெய்விளக்கில் வாட்டும்போதிற்
றியங்காமற்றெரிவையங்கே வருவாள்பாரு
வருட்டியேயென்தாயார் கிருபையாலே
மயங்காதேமாயத்தில் மருண்டுபோவாய்
அருட்டியேமிகுந்தாலு முன்னஞ்சொல்வே
னப்பனே * வூமையென்ற பூச்சிக்கேளே. 454

கேளேநீயட்டைதனைப் பிடித்துவந்து
கிருபையால்தாமரை நூலதனைச்சுற்றி
ஆளேநீயகலிலிட்டு நெய்யைவார்த்து
அப்பனேதீபமதிற் சுரசோடொன்றும்
பாளேநீயவலோட்டின் மையைவாங்கிப்
பாங்கானபுனுகுடனே சவ்வாதுசேர்த்து
நாளேநீமோகினியை நூற்றெட்டோதி
நலமாகப்பணவிடைதான் றிலர்தந்திட்டே. 455

தீட்டையிலேவெறிகொண்ட நாயைப்போலத்
திரிவாள்பாருன்னிடத்தில் மதங்கொண்டேதான்
வாட்டையிலேயுனக்கடிமை யாகிப்போவா
ளப்பனேயின்னமொன் றறையுறேன்பின்
நாட்டிலே § யிந்திரமாங் கோபப்பூச்சி
நன்றாகப்பத்துமட்டு மெடுத்துக்கொண்டு
ஊட்டையிலேவிந்துவுடன் புழுகுகூட்டி
வோகோகோபச்சையென்ற பூரந்தானே. 456

வசிய மை

தானென்றகோரோசினையுஞ் சரியாய்க்கூட்டி
தப்பாமற்செம்பருத்தம் பூச்சார்விட்டு
ஊனென்றேதானரைத்து கபிருபோலே
வுரிட்டியேமோகினிமந் திரத்தைச்சொல்லி

* ஊமைப்பூச்சி - அட்டை. § இந்திரப்பூச்சி - தம்பலபூச்சி.

நாளென்றவாயிரத்தெட் டுருத்தான்போடு
நாட்டடாபுருவமையந் திலர்தம்போடு
காளென்றமங்கையரு மரசரெல்லாம்
வசியமடாஜெகமேழும் வசியமாமே. 457

ஆமென்றவிந்துச்சார் விந்துங்கூட்டி
யதனுடன்பசுவின்கோரோ சிணையுங்கூட்டி
காமென்றதேன்விட்டு மத்தித்தேதான்
கருத்தாகச்சிமிழில்வைத்து மோகினியைச்சொல்லி
சீமென்றதிலர்தமையா திலர்தம்போடு
ஜெகமெல்லாம்வசியமடா யின்னங்கேளு
தூமென்றதைதவேளை வேரைவாங்கி
துப்புறவாய்த்தான்கழுவி விந்துதாக்கே. 458

## விந்து தம்பனம்

தாக்கியேதானரைத் துண்டைபண்ணி
தன்வாயிலிட்டுநீ புணர்ந்தாயானல்
வாங்கியேநின்றதொரு விந்துவையா
மருவினல்விழுகாது தம்பனமுமாகும்
நீக்கியேதம்பனத்தைத் தியானம்பண்ணி
நிலவரமாய்ச்சொல்லிவைத்தே னின்னங்கேளு
போக்கியேமறைப்புண்டு மரைப்பையானும்
புகலவேணுன்னுருத்தான் மறையவெய்யே. 459

## மறைப்புமை

மறையவேசொல்லுகின்றேன் தேசிப்பித்தும்
மைந்தனேகரும்பூனைக் கண்ணும்பித்து
பறையவேகுழியானை நாதவித்தும்
பருவமாஞ்சமன்கொண்டு முதலாஞ்சிலை
கரையவேதானரைத்துத் திரித்துக்கொண்டு
கருவாமணக்கெண்ணெ யகலிலிட்டு
நிறையவேகருந்தேசி மண்டையோட்டில்
நீதிபெறமைவாங்கி வைத்திடாயே. 460

வையாமாவிலிங்கஞ் சிமிழிலேதான்
வைத்துமேமுன்போலே சிலைசெய்து
மெய்யடாபரணிதான் மறைந்துபோகும்
வெகுசுருக்குமுன்சொன்ன தயிலம்பூசி
கையடாவிதுவனக்குத் தெரியும்பாரு
கருத்துவைத்துநீயப்பா சிமிழிதன்னை

பொய்படாயொருநாளும் போகாதப்பா
போட்டிடவுமுன்னுருவ மறையுந்தானே. 461

தானென்றஜாலவித்தை யனந்தஞ்சொன்னேன்
தப்பாதவொருமுறையுஞ் சார்வுமெத்த
வானென்றமைமுரைச் சொன்னேன்யானும்
மறைந்தார்கண்மூலவர்க்கப் பிள்ளையல்ல
தேனென்றமொழியாளே யிதற்குவாசான்
செப்பினனதையறிந்து திறமாய்ச்சொன்னேன்
கோனென்றயென்தாயார் வாமபூசைக்
கூறவேகன்னியுட மாதங்கூட்டே. 462

கூட்டவேகன்னியுட மாதந்தன்னில்
கூறுவேனஷ்டதிக்கு யெல்லாம்வெல்ல
ஊட்டவேயோடுநதிக் கரையோரத்தி
லுத்தமனேசமநிலா யொழுங்கால்பாய்த்து
நீட்டவேபந்தலிட்டு நூத்திருபத்தஞ்சு
நேர்படவேயுன்னடியா லளந்துகொண்டு
நாட்டவேயீசானி மூலைதன்னில்
நலம்பெறவேயரசன்கால் கொண்டுவூணே. 463

ஊணவேகால்தானு மன்பத்தொன்று
வுத்தமனேயூணிநீ சொல்லக்கேளு
நாணவேயடிதானு மன்பத்தொன்று
நாட்டடாநடுமையந் தன்னிலேதான்
காணவேசவுக்கமா யளந்துகொண்டு
கட்டடாவொருகோட்டை வாசல்விட்டு
தோணவேயதற்கப்பால் சொல்லக்கேளு
சுருதியாய்நடுமையந் துண்டுபாரே. 464

பாரேநீயிருபத் தஞ்சடியுமிட்டு
பண்பாகக்கோட்டையிட்டு வாசலிட்டு
சேரேநீயதற்கப்பால் நடுமையத்தில்
திறமைபெறவஞ்சடிநீ யளந்துகொண்டு
நேரேநீகுழிவெட்டி சவுக்கமாக
நின்னடியால்ரண்டரை யளந்துக்கொண்டு
காரேநீசக்கியத்தின் குழியுமாச்சு
கட்டடாவதைச்சுற்றிக் கோட்டைதானே. 465

தானென்றகோட்டைகட்டி வாசல்நாலு
சாதகமாய்த்திறக்காதே படிபோற்கட்டு
ஊனென்றபடிமுகப்பிற் சிம்பவாய்போ
லொழுங்காகக்கட்டியே சொல்லக்கேளு
தேனென்றமண்டபந்தான் முடிந்தபின்பு
செப்புவேன்முட்கோட்டை தன்னிலேதான்
மானென்றபதினெஞ்சு கோணத்துக்கு
மைந்தனே திண்ணையது வளமாய்ப்போடே. 466

போடவேயதற்கப்பால் ரண்டாங்கோட்டை
புனிதமுடனஷ்டதிக்கு மெட்டிலேதான்
நாடவேபீடம தெட்டும்போது
நலமாகவதற்கப்பால் சொல்லக்கேளு
வாடவேபீடமது யாத்தாளுக்கு
வஞ்சடிக்குவப்பாலே போட்டுத்தீரு
தேடவேபீடமது விரல்தானீளஞ்
செப்புவேனிருபத்தஞ் சங்குலமுமாமே. 467

ஆமென்றவங்குலமு முயரங்கேளு
அப்பனேயஞ்சுவிர லங்குலமும்போட்டு
தாமென்றமுதற்கோட்டை திண்ணையெல்லாஞ்
சமரசமாயங்குல மொன்பதாகும்
மானென்றநடுங்கோட்டை பீடமெல்லாம்
மாட்டடாயெட்டுவிரற் கனந்தான்திண்ணை
ஊமென்றவுயரமதப் படியேயாகு
மோகோகோகொலுபீடம் சத்திதானே. 468

தானென்றபீடமது முடிந்தபின்பு
சாத்தடாமேற்கட்டிப் பந்தலெங்கும்
மானென்றவென்தாயா ரிருக்கும்பீடம்
வன்னமென்னசிவந்தநிற மாகச்சோடி
வானென்றசத்தியுட தலைக்குமேலே
மைந்தனேசெஞ்சரிகைப் பட்டுசாத்தி
ஊனென்றகொலுபீடந் தனக்குமுன்னே
யூனவேகொடிவாத்தைச் சொல்லக்கேளே. 469

கேளடாகூவிளத்தின் கம்பம்நாட்டி
கிருபைபெறவே ணுமென்று தியானஞ்செய்து
வாளடாபந்தலின்கா லுள்ளதெல்லாம்
மைந்தனேவாழையுடன் கமுகுநாட்டி

சூளடாமாவிலையாற் பந்தலெங்குந்
   தோரணங்கள்கட்டியே சொல்லக்கேளு
கோளடாவாராமல் திரையினாலே
   கூறுவேன்வாசல்விட்டு மரத்தைநாட்டே. 470

நாட்டியேகொடிமரத்திற் பீடம்போட்டு
   நன்றாகமுன்னாலே நதிபீடந்தான்
தாட்டிகமாய்பீடமிட்டு வட்டமாக
   தானிட்டுயப்பாலே சொல்லக்கேளு
ஊட்டியேஸ்வாமியிட கொலுபீடத்தி
   லுத்தமனேயிலைபரப்பி நெல்லுமிட்டு
கூட்டியேவெற்றிலையைப் பரப்பிநீயுங்
   கூறுவேனொருபடியி னரிசிகொட்டே. 471

கொட்டியேயதின்மேலே தாமரையின்பூவை
   குருவருளைபோற்றிநீ யதின்மேல்வைத்து
ஒட்டியேபுருவமையந் தன்னில்நின்று
   வோகோகோதேவியுட சக்கரத்தைநீயு
மட்டியென்றுநினையாதே யதின்மேலேவைத்து
   வாவியென்றபிராணத்தைத் தோதம்பண்ணி
கட்டியேகும்பத்தில் நூலைச்சுத்தி
   கருணைதரவேணுமென்று யதின்மேல்வையே. 472

வையப்பாஜலத்தைவிட்டு மாவிலையுஞ்சாத்தி
   மார்க்கமாய்த்தேங்காயை யதின்மேலேவைத்து
மெய்யப்பாசொல்லிவைத்தே னென்தாய்க்குத்தான்
   வெகுப்பிரியஞ்சிலம்பான பட்டுஞ்சாதி
பொய்யப்பாசொல்லவில்லை யவட்குதானும்
   பூட்டடாவாபரணம் பொட்டுக்காரை
மெய்யப்பாபுனுகோடுஞ் சவ்வாதுஞ்சேர்த்து
   விருதாகப்பரிமளங்க ளவட்குசாத்தே. 473

சாத்தியேபீடமது நிரையச்சாத்தி
   சார்வானவிடங்களெல்லாந் தொங்கவிட்டு
நேத்தியாய்ப்புட்பத்தாற் பந்தலிட்டு
   நேரானமுப்புரிநூல் தொப்பைசாத்தி
வோதியேயவளிடத்தில் சூலம்வாளும்
   வதிதனோடேவாயுதங்க ளுள்ளதெல்லாஞ்
சாத்தியேயவளிடத்தில் வில்லுவைத்து
   சதிராகவதற்கேற்ற வம்புவையே. 474

வையப்பாவாயுதங்கள் பேரைச்சொல்லி
வளமையாயவனுடைய பாதந்தன்னில்
செய்யப்பாயதற்கப்பால் ரண்டாங்கோட்டை
தீர்க்கமாயஷ்டசித்தி யெட்டுநாட்டு
மெய்யப்பாசொல்லிவைத்தே னெட்டுப்பீசம்
வெண்மையென்றநெற்பரப்பிக் கும்பம்வைத்து
பொய்யப்பாசொல்லவில்லை யென்தாய்போலே
போதரவாய்ச்சோடித்து புஷ்பஞ்சாத்தே. 475

சாத்தியேவந்தந்த சத்திபீசம்
தாக்கடாமுன்சொன்ன படியேநீயும்
நேத்தியாய்ச்சக்கரங்கள் சரியாய்க்கீறி
நீயிடுவாயந்தந்தப் பீசந்தன்னை
ஏத்திசெயதற்கப்பால் மூன்றாங்கோடி
இதமாகவஷ்டதிக்குப் பாலர்தன்னை
போத்தியேவஷ்டசித்து வைரவர்கடன்னை
பூட்டடாசங்கிலியும் பூட்டத்தானே. 476

தானென்றவயிரவர்க ளெட்டுப்போக்குந்
தாக்கடாவவரவர்கள் பீசந்தன்னை
ஊனென்றவவர்களுட வெழுத்தைநன்று
யுத்தமனேநெல்லிட் டக்ஷரத்தைக்கீறி
தேனென்றகும்பத்தில் ஜலத்தைவிட்டு
திறமாகமாவிலையுந் தேங்காய்வைத்து
வானென்றமுப்புரிநூற் றன்னைச்சுற்றி
மைந்தனேபூதியிட்டு வைத்திடாயே. 477

வைத்திடுருத்திராக்ஷம் நிறையச்சாத்தி
மைந்தனேசூலமுடன் பாசந்தானும்
வைத்திட்டுப்போக மற் கெதையும்வைத்து
வகையோடேயாயாசம் புகழாய்சாத்தி
வைத்திட்டுமோகவே திக்குப்பாலர்
விருதுபெரவீடெல்லாங் கலந்துநிற்பார்
வைத்திட்டுவவர்களுட பீடந்தன்னை
மாட்டடாநெல்லையிட்டுக் கலசமாக்கே. 478

ஆக்கவேயவர்களுட் பீடந்தன்னி
லப்பனேயிட்டுநீ கும்பம்வைத்து
சேக்கவேமாவிலையுந் தேங்காய்வைத்து
தெர்ப்பைவிட்டுவஸ்திரங்கள் நிறையச்சாத்தி

பார்க்கவேபுஷ்பங்கள் நிறையக்கொட்டி
  பரிவாவாயுதீங்க ளவர்கள்கையில்
எக்கவேகொடுத்துவிடு சாத்திரப்படியே
  யிதமாகப்பூசைசெய்யும் வகையைக்கேளே. 479

கேளடாகீழ்வாசல் கணபதியுங்கந்தன்
  கிருபைபெறத்தானிறுத்தி தெற்குவாசல்
சூலடாதெட்சணு மூர்த்தியாசான்
  சொல்லுவேன்மேல்வாசற் சண்டிகேசன்
வாளடாவடவாசற் றாக்கையோடு
  மைந்தனேபீடமிட்டுக் கும்பம்வைத்து
கேளடாவாராம லவர்கட்கேற்ற
  கிருபையாம்வஸ்திர மாபரணஞ்சாத்தே. 480

சாத்தியேயந்தந்த யினத்தின்பக்கந்
  தப்பாமலாயுதத்தை கையிலீந்து
போத்தியேயவர்களுக்குப் புஷ்பஞ்சாத்திப்
  போதரவாய்ப்பரிசனங்கள் செய்தபின்பு
எத்தியேமுன்சொன்ன படியேநீயும்
  என்தாயிக்குள்ளதெல்லா முன்பின்வைத்து
நேத்தியாயிப்புரத்தில் நிறையதேவர்
  நேர்படவேயவர்களுக்கு மப்படியேவையே. 481

வையப்பாயிப்படியே பீடந்தோறும்
  வேந்தனேகம்பமது நந்திபீடஞ்
செய்யப்பாவவருடைய பீடந்தன்னிற்
  றேவிமுன்புவைத்ததெல்லாஞ் சிறக்கமாட்டுங்
கையப்பாதெர்ப்பையினாற் கயிறுண்டாக்கிக்
  கட்டடாகொடிமரத்திற் கொடியைச்சேர்த்து
மெய்யப்பாசொல்லிவைத்தேன் தெர்ப்பைதன்னை
  விதமாககொடிமரத்திற் சுத்திக்கட்டே. 482

கட்டியேகொடிமரத்தின் மாவிலையுஞ்சாத்திக்
  கனக்கவேசந்தனமு மஞ்சளப்பி
கெட்டியாயட்சதைகள் நிறையச்சாத்தி
  கிருபைபெறவேணுமென்று தியானஞ்செய்து
தட்டியொன்றுநினையாதே யாததாள்முன்பு
  தான்பெருகத்தேங்காயை யுடைத்துவைத்து
நாட்டிலேயுள்ள தேவதைகளெல்லாம்
  நிதிபெறவேதேங்காயை யுடைத்துவையே 483

உடைத்துமேதீபமொடு தூபங்காட்டி
வுள்ளத்திற்றுதிகள்மிக செய்தபின்பு
சடைத்துநிற்கபோகாதே மணஞ்சோம்பாதே
தாயுனக்குவேண்டியது தருவாளப்பா
படைத்துமேமுன்சொன்ன படியேநீயும்
பாரியெனுந்தொப்பையினற் கயிருகட்டி
மடைத்துமேகொடுந் தருப்பையாலேநீயு
மப்பனேகட்டிநீ யிருந்திடாயே. 484

இறந்துகொண்டு யெக்கியமாங்குழிமுகத்தி
லென்னசொல்வே னெட்டுவகையமுதினலே
பொருந்தவேயக்கினியை மூட்டிநீயும்
போக்கோடேயாவினெ யோமஞ்செய்து
வருந்தவேயெக்கியத்தின் படியேநீயு
மாருதிகட்செய்தபின்பு சொல்லக்கேளு
திருந்தவேதேவியுட பீசந்தன்னிற்
றியானித்துயெக்கியத்தி லோமஞ்செய்யே. 485

செய்யப்பாதேவியுட மந்திரத்தினலே
செய்பாகங்கைபாகந் தீர்க்கமாக
மெய்யப்பாவுருத்தானு மாயிரத்தெட்டானல்
மேன்மையாய்த்தேவதைகட் பீசந்தன்னை
வையப்பாவுருத்தானும் தூற்றெட்டோதி
மார்க்கமாய்தேவதைகட் டாளென்றுக்கு
நெய்யப்பாவிட்டல்லோ சமத்தோடொக்க
நேராகநெற்பொரியுங் கலந்துசெய்யே. 486

கலந்துநீசெய்யுகிற வரிசைகேளு
கருதவேவிருதமையத் தொட்டுநீயும்
நலந்துமேநவமிநா ளொன்பதுக்கு
நாட்டவேயுருத்தானும் லக்ஷமாக
வலந்துநீபோகாதே யொருபோதப்பா
வாவின்பாற்கொண்டுநீ விரதமாகக்
கலந்துநீபுட்பத்தா லருச்சனேயேசெய்ய
கருகவேவந்திடுவா ளென்தாய்பாரே. 487

பார்க்கவேயென்தாயார் வந்துநின்றுற்
பணிந்திடுநீயவள்பதத்திற் சிரசிற்றட்ட
வேர்க்கவேதேவர்கணங் கோடிசூழ
வெட்டுபேர்வயிரவர்கட் கார்த்துநிற்கக்

கார்க்கவேயட்டசித்து யெட்டுபேருங்
கைகட்டிப்பணிவிடைகள் செய்துநிற்க
வார்க்கவேயஷ்டசித்துப் பாலரோடு
மம்மனுடகொலுபீடத் திருப்பார்பாரே. 488

பாரப்பாவிப்படியே தேவர்சூழ
பராபரியாள்வந்துநின் றுன்னைப்பார்த்து
வாரப்பாயிப்படிநீ பூசைசெய்ய
வருளேதுவென்றுசொல்லிக் கேட்டாளானாற்
சீரப்பாரோமனுட பிள்ளையென்று
செப்பிடுநீயப்போது தேவிதானுந்
தேறப்பாயென்னையுமே யழைப்பாள்பாரு
சினத்திலேவந்திடுவேன் திறமைபாரே. 489

திரமையென்னயென்தாயார் கொலுவின்முன்னே
தீர்க்கமாயுன்முகத்தைப் பார்த்துநானும்
பருதியென்மனோன்மணியாள் பாதந்தன்னிற்
பணிவிப்பேன்நீகேட்ட பொருள்களெல்லாந்
தருகுவேனென்றுசொல்லி விடுவாள்நீயுந்
தரணிதனையாளவென்று வின்னங்கேளு
காறுமென்றுவாயுதங்கள் வேணதெல்லாங்
கைகொடுப்பாள்நீயுமதை வாங்கிக்கொள்ளே. 490

கொள்ளவேவாயுதங்க ளுள்ளதெல்லாங்
கொடுத்திடுவாள்சுத்தில்நின்ற தேவரெல்லா
மெள்ளவேவாயுதத்தி னினங்களெல்லா
மவரவர்கள்சொல்லியதை வாங்கிக்கொண்டு
முள்ளவேயட்டதிக்கு யெங்கும்வென்று
மீண்டுவருமுன்னிடத்தி லாயுதமும்பாரு
தள்ளவேயுனக்கீடு மெதிரியுண்டோ
தப்பாதுவாயுதத்தின் சார்வுதானே. 491

தானென்றயிப்படிநீ செய்தாயானால்
சாயுச்சியபதந்தன்னைச் சேரமாட்டாய்
தேனென்றமொழியுடையாள் யென்தாய்தன்னைத்
தீர்க்கமாய்காயசித்திக் கேற்றகற்பம்
மானென்றபதியுடையாட் டன்னைக்கேட்டால்
வழங்கிடுவாள்நிமிஷத்திற் சித்தியாகு
மோமென்றம்பொருளுரைப்பா ளுனக்குமைந்தா
வொருநொடியிற்காயசித்தி யாகுமெண்ணே. 492

எண்ணவேவரிசையுட னட்டசித்தி
யிதமானகாயசித்தி ஞானசித்தி
கண்ணவேகூர்த்தம தொன்றுக்குள்ளே
கைவசமாய்முடிப்பதற்கு வகையுஞ்சொல்வாள்
பண்ணவேயெக்கியத்தின் பூசையாலே
பலித்துதடாகாயசித்தி யுனக்குமைந்தா
வண்ணவேயெந்தனுக்குக் கீர்த்தியாச்சு
வதிதமென்றகெவுனத்தை யறிவிப்பேனே. 493

அறிந்துமேகெவுனத்திற் சித்தரோடு
மறைத்துப்போயெந்தனுட பிள்ளையென்று
பரிந்துமேபுசண்டருட பதத்தில்விட்டு
பராபரையாண்மிகுந்தசித்த னென்றுசொல்லித்
தெரிந்துமேகெவுனமென்ற குளிகைதன்னைத்
தீர்க்கமாயுந்தனுக்குக் கொடுத்தேன்பாரு
சொரிந்துமேசுரூபசித்தி பெற்றனென்று
சொல்லுவார்புசுண்டவர்க்க மென்றுதானே. 494

தானென்றவிப்படிநீ பேறும்பெற்று
தாய்பதத்தைப்பூசித்தாற் சித்தனுவாய்
வானென்றயோகினியா ளாதிவாரம்பூசை
வரிசையாயிப்பூசை வளமாச்செய்வார்
தேனென்றராசனென்றால் வெள்ளியிற்பூசை
செய்துமேவாயுதங்கள் வாங்குவார்பார்
மானென்றவாயுதத்தாண் மாண்டசேனை
வையகங்கள்கொள்ளாது மருவிப்பாரே. 495

மருவவேவாயுதத்தின் போக்குசொன்னேன்
மறைத்தார்கள்சித்தரெல்லாம் கலியுகத்தில்
சருவவேயவர்களுட சேனையெல்லாந்
தவிடுபொடியாகினதோர் தண்மையாலே
உருவவேயித்தொழிலை யொளித்தார்பாரு
மோகோகோமொருவருக்குந் தெரியாமற்றான்
அருளவேவெளிதனிலே நடனஞ்செய்த
வையருடபாதமதை யருட்செய்வேனே. 496

அருளுவேனகாரமென்ற ஞானந்தன்னை
யறியாமல்ஞானிய வாதமாய்ப்போனார்
பொருளவேதொன்றுமில்லை சிவத்தின்தீட்டை
பூட்டுவேன்சத்தியுட தீட்சையெல்லா

மருளவேசொன்னதெல்லாம் வேறொன்றில்லை
 மார்க்கமென்னஅகாரமதை சிவமதாகும்
தெருளவேஉகாரமது சத்தியாகுஞ்
 சோடாவிதிரண்டு மொன்றாய்த்தானே. 497

தானென்றரண்டெழுத்துங் கூடும்போது
 சமுசியங்களில்லையடா யேரகமாச்சு
வானென்றமவுனமடா விதுவேயாகும்
 வையகத்திலறியாம லலைந்தார்யாருந்
தேனென்றரவிமதியு மிதுவுமாகுந்
 தீர்க்கமென்னவப்புமுப்பு மொன்றாய்க்காணு
மானென்றமவுனத்தை யறியாமூடர்
 மயங்கினார்வெவ்வேறே யென்றுதானே. 498

என்றுமேசொல்லிவைத்த ஞானமெல்லா
 மெவராலுஞ்சொல்லரிது யென்னசொல்வேன்
ஒன்றுமேபொருளல்லால் வேறொன்றில்லை
 யுன்னறிவால்அகாரத்தை வுள்ளேபாரு
சென்றுமேஉகாரமது வட்டம்போலச்
 சேருமடாஅகாரத்தின் சுழுத்தின்மேலே
அன்றுமேசொன்னமொழி யிதுதானப்பா
 யறிவென்றமனக்கண்ணா யறிந்துபாரே. 499

பார்க்கையிலேஅகாரமது விரிந்துகாட்டும்
 பரிவானஉபகாரம் தேடிக்கொள்ளு
மேர்க்கையிலேயிதிரண்டு மொன்றாய்க்காணு
 மிதுவல்லோஞானவெளி முடிந்தவாறு
சேர்க்கையிலேயாதுதல மிதுக்குள்ளாச்சு
 தீர்க்கமாஞ்சொரூபசித்தி யிதுக்குள்ளாச்சு
பார்க்கையிலேமூலவட்டம் அகாரபீடம்
 காட்டுமடாவாசியுடன் கருவைத்தானே. 500

கருவானஉகாரத்தை நெஞ்சில்வைத்து
 கட்டடாஅகாரமென்ற வறிவினாலே
உருவானவாசியது வடங்கும்பாரு
 வுள்ளுக்குச்செல்லுமடா யாளும்வீட்டில்
அறிவானகருவுகளு மாண்டுபோகு
 மப்பனேவாறுதல மொன்றாய்க்காணுங்
குருவானகுருவெல்லா மனமேயாசான்
 கூட்டுமடாபெருவெளியின் மவுனந்தானே. 501

மவுனமென்றவெழுத்தெல்லா மகாரமென்பார்
மாண்பரேபட்டணம்போ லதுவுமக்குக்
கெவுனமென்ற அகாரமடா ராசனுச்சு
கூட்டிவைத்தமந்திரியு மதாரமாச்சு
தவுனமென்றகருத்திலே அகாரமாகுங்
கண்டையடா கடுவெளவாம் உகாரமாகும்
யவனமென்றுமில்லையடா யிதுரண்டுக்கும்
யாகாவெளியதனிலே யமர்ந்தவாரே. 502

வாரானஞானமடா மவுனமென்பார்
வாய்முடியிருந்ததினு லென்னவாகுஞ்
சேரேநீவாசியைத்தான் அகாரவீட்டிற்
சிக்கவேதானிழுத்த வழுந்திப்போகுங்
கூரானபிடரிவழி வாசியேறி
கூட்டுமடா அகாரவெளி யுச்சிமேலே
சீரானஉகரமதை விட்டாயானுற்
திரும்பவன்மாட்டாது சென்றுசேர்மே 503

போகுமேமவுனமென்ற ஞானமில்லை
போக்கறியார்சரிதைதகெட்ட நெஞ்சத்தா
தாகுமேமனக்கண்ணைப் பதியவைத்து
சார்வாகஉகரத்தை யிழுக்கும்போது
வாகுமேஅகரமுடன் இசைந்துகூடி
வசமாகுமண்டபகி ரண்டமெல்லாம்
சாகுமேதத்துவங்க ளற்றுப்போகுந்
தப்பாதுபுசண்டருட சார்புக்கேளே, 504

கேளடாபுசண்டருமே யெனக்குச்சொன்னார்
கிருபைபெற்றுமவுனத்தைச் சொல்லுவேன்யான்
கேடாவவர்பாதந்து திதஞானம்
கொட்டினேனன்னூற்றி ஞகுவையெல்லாம்
பாளடாபோகாமல் மனத்தைநீயும்
பதியவேமூலமென்ற நந்திகுள்ளே
வாளடாவுள்ளத்தி லூனும்போது
மாண்டுதேடாபிரமியென்ற மாயன்தானே. 505

மாயமென்றயோகமெல்லா மிவ்வளவேயாச்சு
மயங்கினுருலகத்தோ ரறியாமற்றுன்

காயமென்றயோகத் தாக் கிதுவேமூலங்
　காட்டினே னுள்ளபடி கபடில்லாமல்
வாயமென்றபூவெடுக்கும் வகைகளெல்லாம்
　வகையாகச்சொல்லிவைத்தே னிருமுற்றீமே
சேயென்றவெங்களுக்கே இந்தநூலை
　செப்பினேன்கருக்களெல்லாந் திறமாய்த்தானே. 506

திரம்பெத்தநூத்திலே சிங்கிவத்தை
　திரட்டிவைத்தேன்பாகதுபோத் தின்பாரில்லை
வரம்பெற்றவிந்தநூ லன்னூற்றுள்ளே
　மாட்டினேன்சவர்க்கார வுப்புதானுஞ்
சிரம்பெற்றபோகரிஷி நூத்திற்சொன்ன
　திராவகத்திற்குணமில்லை தீர்க்கம்போதா
தாம்பெற்றபுசண்டருட பிள்ளையோமன்
　சாத்தினேன்முப்பூவை தீர்செய்யே. 507

முன்னமேமுன்சொன்ன நூற்றிற்றுனும்
　மாகச்சொல்லிவைத்த சிங்கிக்கப்பா
பமேவத[illegible]ப்போடு
　ப்ப[illegible]சொன்னேன் [illegible]றைகளெல்லாம்
மெய்யாகப்[illegible]போலே தொட்டிதோடு
　[illegible]ந்துசுறுக்காய்ந்தேய்த்து பற்பமாகும்
பொய்[illegible]ன்றும்[illegible]தா விந்தநூலில்
　பூட்[illegible]னேன்கருக்[illegible]ளெல்லாம்[illegible]டுப்பாரே. 508

[illegible]ருப்பு

பாரப்பா நூற்சொன்னேன் பதினெறுஞ்சொன்னேன்
　பரிவானவைம்பதிலே ரண்டுசொன்னேன்
சிரப்பாயிமைவனுஞ் ஞானஞ்சொன்னேன்
　சிறப்பாகருருமுறையுஞ் சொல்லிவைத்தேன்
வீரப்பாரோமரென்று பேருங்காட்டி
　விசையெல்லாஞ்சொல்லிவைத்தே னிந்தநூலில்
ஆரப்பாவவனிலார் கொடுக்கப்போரா
　ரப்பனேபுசண்டருட பதந்தான்முற்றே. 509

உரோமரிஷி - 500

முற்றிற்று.



திருமகள்விலாசம் பிரஸ், சென்னை:—1936